லேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 ,,

சந்தாவின் விவரம்.
ஒரு வருஷத்துக்கு ரூ. 4.
6 மாதத்துக்கு ,, 2-2.




அறிவைப்பரவச் செய்வதற்கான

மாதாந்தரத் தமிழ்ப்பத்திரிகை.



புத்தகம் 10.] 1901௵ செப்டெம்பர்௴ [இலக்கம் 5.

## Terms of Subscription to the 'Viveka Chintamani.'

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As. : Back Nos. 8 As. each.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 7*s.* 6*d.* NET PER ANNUM.

**Thin Paper Edition** for the People :—

SUBSCRN. PRICE : YEARLY RS. 4 ; HALF-YEARLY RS. 2-2.

SINGLE COPY, CURRENT NO. 5½ AS. ; BACK NOS. 6 AS. EACH.

ENGLISH & FOREIGN SUBSCRIPTION 5*s.* 6*d.* NET PER ANNUM.

**If strictly Prepaid** at the commencement of the term, (*i. e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As. off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year.

☞ To regular annual subscribers 2 months' grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume*, though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May ; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P. to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and save vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்.

தளமான காகிதப்பதிப்பு :—அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசானகாகிதப்பதிப்பு :—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாசசந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்ரல் அல்லது மேமாசம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தாதாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றபடி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

☞ வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்துகொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் அதாவது ஏப்ரல் அல்லது மே மாசத்திலே நோட்டீஸ் கொடுக்கவேண்டும் ; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும்போதெல்லாம் அவர்கள் ரிஜிஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்குவரவுக்கும் இடமிராது.

## READINGS AT HOME.

### A GLIMPSE INTO THE FUTURE.

## தமயந்தி.

18-ம் நாள் படிப்பு.

பதினெட்டாம் நாள் வழக்கம் போல ருக்மணியம்மாளும் மற்றவர்களும் கதை கேட்க வந்துட்காரச் சுப்பலக்ஷ்மி எடுத்துப்படிக்கத் தொடங்கினள்.

"தமயந்தி இவ்வாறு சேதி ராஜன் அரண்மனையில் இருக்க அங்கு காட்டிற்பிரிந்த நளமஹாராஜாவின் விர்த்தாந்தத்தை எடுத்துரைப்போம். அவன் மனைவியைப்பிரிந்து காட்டு மார்க்கமாகச் செல்லுங்காலையில் ஆங்கோர் புறத்தில் காட்டுத்தீ புகையும் ஜ்வாலையுமாய் சடசட வென்னும் ஒலியோடு எழுந்து தோன்றுதலைக் கண்டான். கண்டு அதனை அடுத்துச் சென்றபோது ஆங்கோர் பாம்பு அக்னிச் சுவாலையில் அகப்பட்டுத் தப்பிப்போக வழியில்லாமல் அவஸ்தைப்படுவது அரசனைக் கண்டதும் "ஹே ராஜன், உன்னை இந்த ஆபத்துவேளையில் கடவுள்தான் கொண்டுவந்துவிட்டனர். நீயே தஞ்சம் : நான் இத்தீயில் வெந்து மாளாமல் தயவுசெய்து என்னைக் காக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டது. அப்போது அரசன் எந்தப் பிராணியாயிருந்தாலென்ன ஆத்மா யாவர்க்கும் ஒன்றுதானே என்றிரங்கி, "பயப்படாதே இதோ காக்கிறேன்" என்று சொல்லி அப்பாம்பை அடுத்துச்சென்றனன். பாவம் அம்மாசுணம் பாதியுடல் நெருப்பிற் கரிந்துபோய் ஓர் பனைமர மறிந்து கிடந்ததுபோலக் கிடந்தது. அது அரசனை நோக்கி, "நானோர் அந்தணன்; சாபத்தினால் இவ்வாறு பெயர்ந்துசெல்ல வலியில்லாமல் கிடக்கின்றேன். என்னை எண்ணிப் பத்தடி தூரத்துக்கப்பால் எடுத்துவிடுவாயாயின் உனக்கு நிரம்பவும் புண்ணியமுண்டு. இந்நன்றியை என்றும் மறவேன்" என்றது. அரசன் அக்கினிதேவன் தனக்கருளிய வரத்தால் யாதும் ஊறுறாமல் அத்தீயுட்புகுந்து அம்மாசுணத்தை எடுத்து வெளியில் இட்டான். ஒன்று முதலாக எண்ணித் தசவென்று பத்தாமடி பெயர்த்தலும் போட்டது கையில் அந்நன்றிகெட்ட பொல்லாப்பாம்பு. அரசனும் அவ்விஷவேகத்தினால் உடம்பெல்லாம் கருகி உருவம் மாறுபட்டான். பாம்புக்குப் பால் வார்த்தால் அது படுவிஷத்தையே கொடுக்கும் என்பது பொய்யோ? பின்பு கடித்த பாம்பு உருவம் மாறி முன்னுருக்கொண்டு அரசனை நோக்கி வெகு கல்வித்தனமாய் "நீ தச (கடி) என்றதனால் நான் கடித்தேன் என்று வன்மையோடு சொல்லிப் பின்னும் நான் கடித்தது உனக்கு நன்மையே யன்றித் தீமையன்று. நீ ராஜவடிவோடு செல்வாயானால் உனக்குப் பகைவரால் கெடுதி சம்பவிக்கும், இப்போதுன்னை ஒருவரும் வருத்தார்கள். நீ வாகுகனென்னும் பெயருடன் அயோத்தியா ராஜாவாகிய இருதுபன்னனிடம் சென்று அவனுக்குச் சாரதியாகிக் குதிரையோட்டும் வித்தையை அவனுக்குக் கற்பிப்பாயாயின் அவனும் உனக்குச் சூது வெல்லும் வித்தையைக் கற்பிப்பான். அதனால் நீ இழந்த அரசைத் திரும்பப்பெற்று உன் மனைவியோடும் மக்களோடும் இனிது வாழ்ந்திருப்பாய். உன்னது முன்னுருவம் பெறவேண்டுமானால் இதோ இப்பூந்துகிலைத்தரிக்க அவ்வுருவம் உடனே உண்டாகும்" என்று துகிலையும் கொடுத்து அப்பால் அகன்றது.

தாத்தா.—பாம்புப் பால் வார்க்கப் படுவிஷத்தையே கொடுக்கும் என்பது மெய்யாயிற்றே. துஷ்டர்களுக்குச் செய்யும் உபகாரமெல்லாம் இப்படித்தான். தமக்கே தீங்கு விளையும்.

வேங்கைவரிப்புலிக்குத் தீர்த்தவிடதாரி
ஆங்கதனுக்காகாரமானாற்போல்—பாங்கறியாப்
புல்லறிவாளர்க்குச் செய்த வுபகாரம்
கல்லின்மேலிட்ட கலம்.

என்று சொன்ன ஔவையார் வாய்க்குச் சர்க்கரைதான் போடவேண்டும். 'பாத்திரமறிந்து பிச்சையிடு கோத்திரமறிந்து பெண்ணைக்கொடு' என்று சொல்லியிருப்பதும் இவ்வுண்மையே யன்றோ.

சிவகாமி.—ஔவையார் சொன்ன வார்த்தைகளுக்கெல்லாம் சர்க்கரை போட்டால் அவள் எப்படித் தின்று செரித்துக்கொள்வாள். ஆயினும் இப்பாம்பின் செய்கை அவ்வளவு கொடுமையாகத் தோன்றவில்லை. ஊர்வசி சாபம் உபகாரம் என்பதுபோல இப்பாம்பின் கடி நளனுக்கு உபகாரமாத்தானே யிருந்தது. அவன் தன் நிஜவுருவுடன் சென்றால் பகையரசர்களாலும் வேறு காரணங்களாலும் மிக்க கெடுதி விளையுமன்றோ.

ருக்மணி.—ஆமாம். இவ்விஷயத்தில் அப்பாம்பைத் தூஷிக்க இடமில்லை. அன்றியும் தன் விஷத்துக்கு முறிவும் கொடுத்ததல்லவா? ஆயினும் துஷ்டர்களுக்கு உபகாரம் செய்யக்கூடாதென்பது உண்மையே. மேலே வாசி சுப்பு.

"வேற்றுருவடைந்த நளமஹா ராஜனும் அப்பாம்பின் சொற்படியே அயோத்தி நகரை அடைந்து அவ்வரசனிடத்துச் சாரதியாக அமர்ந்து காட்டிற்பிரிந்த தன் காதலியை நினைத்து அழுது வருந்திக்கொண்டு காலம் போக்கினன்.

இவர்கள் இவ்வாறிருக்க மாமனாகிய வீமராஜன் மருமகனுக்கு வந்த விபத்தை யறிந்து துக்கித்து அவர்களைத் தேடிவரும்படி அங்கங்கே ஊருராய்ப் பல பிராமணர்களை விடுத்தனன். அவர்கள் கடல்சூழ்ந்த உலகமெங்கும் அலைந்து தேடியும் காணாமல் முடிவில் அவ்வந்தணர்களில் ஒருவனாகிய சுவேதன் என்பவன் தமயந்தியைச் சேதிராஜன் மனையில் தேடிக் கண்டுபிடித்தனன். அவளைக் கண்டு அவளது மாசூந்த் தொளிமழுங்கிய மேனியை நோக்கி, "ஆ விதியின் பயனிப்படியோ! எந்தப் பதவியில் இருந்த இவளுக்கு இப்படிப்பட்ட கஷ்டம் நேர்ந்ததே," யென்று சோகித்து அழுதலும், தமயந்தி "ஐயரே நீரேன் என்னை நோக்கி அழுகின்றீர்" என்ன, அவ்வேதியன் "அம்மா நான் உன் தந்தைக்கு உயிர்போலச் சிறந்த தோழன்; உன்னைத் தேடிவந்தேன், உன் பெற்றோர் சுகமாயிருக்கின்றனர்; உன் குழந்தைகளுக்கு உன்னைக் காணாதக் குறையே யன்றி வேறே குறையில்லை" என்று கூறலும் தமயந்தியும் கண்ணீர்சோர அழுது மெய்தளர்ந்தனள். அஃதறிந்து சேதிராஜன் தாயார் "இவள் யாவள், உன்னைக்கண்டு அழுது விசனிக்கக் காரணம் என்ன" என்று வினவ அவ்வந்தணன் நடந்த விர்த்தாந்தங்களை விவரமாக உணர்த்தினன். அப்போது அப்பெருமாட்டி "அந்தோ இதுகாறும் அறியாமற்போனேனே இக்குலமகள் எனக்குத் தமக்கையின் மகளாயிற்றே" என்று அவளை அணைத்து விம்மி விம்மி யழுதனள். தமயந்தி "அன்னாய் நீ என்னை மகளென் றறியாமுன்னும் மகளைப் போலவே பாவித்து அன்போடு பாதுகாத்து வந்தாய். இத்தனை நாளாய் எப்படியோ பிரிந்திருந்துவிட்டேன் இப்போது என் அருமைக் குழந்தைகளைப் போய்ப்பார்க்க ஆவல் மீறுகின்றது. என்னைப் பிரயாணம்பண்ணி என் தந்தையின் நகருக்கு அனுப்பிவிடுவாய்" என்றனள். அவளும் அவ்வாறே பல்லக்கில் வைத்து தகுந்த துணையுடன் அனுப்புவித்தனள்.

"தமயந்தி தன் தந்தை தாயாரை அடைந்து அவர்களைக்கண்டு கண்ணீர் சொரிந்து வருந்திப் பின்பு தன் மக்களைத்தழுவி அவர்களுடைய மலர் முகங்களாலும் மதுரவசனங்களாலும் ஒருவாறு தன் துயரை ஆற்றிக்கொண்டனள். பின்பு, தந்தையை நோக்கி, "ஐய, என்னைத் தேடியது பெரிதல்ல என் மணமகனையும் தேடித் தருவிக்கவேண்டும்" என்று வேண்டிக்கொண்டனள். தந்தையும் உடன்

பட்டு ஒற்றரைவிளித்து எத்தேயத்தும் சென்று தேடிவரும்படி ஆக்ஞாபித்தனன். அவர்களும் அவ்வாறே தேடிவருகையில் ஒருவன் "அயோத்தியா நகரில் வாகுகனென்னும் பெயருடையனாய் ஒருவன் அரசனுக்குச் சாரத்தியம் செய்கின்றான். சமையற்றொழிலிலும் வல்லவனாம்; அவன் மனைவி மக்களைப் பிரிந்ததனால் எப்போதும் வருந்துகின்றான். உருவம் ஒன்று தவிர மற்றக் குறிகுணங்களை ஊகித்துநோக்கின் நளன்போல்வான். இவ்விவரம் தெரிந்துவந்தேன்" என்றனன்.

தாயார்.—போதும் இன்று இந்தமட்டில் கதையை நிறுத்துவோம்.

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

---

TRUE HAPPINESS AND ITS SECRET.

## ஆநந்தானுபவ இரகசியம்

அல்லது

## சந்தோஷமாயிருக்க வழி.

---

உண்மையில் சந்தோஷமாயிருத்தலாவது மனத்திருப்தியால் வரும் ஒரு ஆநந்தத்தையனுபவித்தலாம். இந்த சந்தோஷமே சந்தோஷமென்று சொல்லத்தக்கது. மற்றப்படி மனம் நினைத்தவாறு போகவிட்டு நாமும் அது போன வழியிற்சென்று ஆடுவது அல்லற்படுவதேயன்றி அதில் ஆநந்தம் ஒன்றுமில்லை. அதில் உண்டாகும் ஆநந்தம் இரவில் வழி தப்பி மயங்கும் பிரயாணிகள் கொள்ளிவாய்ப் பிசாசின் வெளிச்சத்தைக் கண்டுகொள்ளும் ஆநந்தத்துக்கு ஒப்பானதேயன்றி வேறல்ல. அதாவது துன்புற்றவிடத்து இன்பமளிப்பது போல்காட்டி உற்சாகத்தைக் கிளப்பி உடனே முன்னிலும் பெரிதான துன்பத்தில் ஆழ்த்தும் மோசடித் தன்மையதாம். கனம்பொருந்திய நமது சென்னை கவர்னர் லார்ட் அம்டில் அவர்கள் உதகமண்டலத்திலுள்ள 'லாரென்ஸ் ஆசைலம்' ஸ்தாபனத்திலுள்ள மாணாக்கர்களுக்கு அந்த ஸ்தாபனத்தின் வருஷோற்சவ காலத்தில் அக்கிராசனத்திலிருந்து புத்திமதி வார்த்தைகள் சொல்லியபொழுது உண்மையான சந்தோஷத்துக்கு வழியின்னதென்று அதன் இரகசியத்தை யெடுத்துச்சொல்லி வற்புறுத்திக் கூறினார். அவர் சொல்லிய சிறந்த புத்திமதி ஒரே வாக்கியத்தில் அடங்கியதாயிருந்தது. அதாவது:– "உங்கள் கைக்கு அகப்பட்ட வேலையை உங்கள் முழு வல்லமையோடும் செய்து முடியுங்கள்" என்பதேயாம். இந்த வாக்கியம் வெகு சாதாரணமானதாகவும் எல்லாருமறிந்த பழமொழியாகவும் தோன்றும். இது எவ்வளவு சாதாரணமாகத் தோற்றினும் இதில் மகா பிரமாதமான இரகசியம் அடங்கியிருக்கிறது என்பது உண்மை. நமது கவர்னர் எல்லாவித மனிதர்களையும் எல்லா நிலைமையிலுள்ளவர்களையும் அறிந்திருக்கிறார். அப்படிப்பட்ட அவர் எப்படிப்பட்டவர்களுக்கும் நினைத்ததை முடிக்கும் ஆற்றலும், உண்மையான சந்தோஷமும் அளிக்கத்தக்க இரகசியம் இந்த வாக்கியத்தில் அடங்கியிருக்கிறதென்று தம்முன்னுள்ள மாணாக்கர்களுக்கு உறுதியளித்துக் கூறினதோடு அதைப்பின்னும் அவர்கள் மனதிற்பதிய வற்புறுத்திப் பேசினர். ஒருவர், ஆண்பாலானாலும் சரி, பெண்பாலானாலும் சரி, உலகத்தில் அவருடைய அந்தஸ்தும் நிலைமையும் எத்தன்மையதாயினும் சோம்பித்திரிவரேல் அவர் உண்மையான சந்தோஷமனுபவிப்பது கூடாமையென்பதை அவர் வாக்கைக்கொண்டு உறுதியாய் நம்பும்படி வற்புறுத்தினார். சீரும் செல்வமும் பெருமையுமுள்ள மேலந்தஸ்துள்ளவர்களுடைய நிலைமையைக் கண்டு பொறாமைப்பட நினைப்பீராகில், அப்பொழுது இந்த உண்மை உங்கள் ஞாபகத்திலிருக்கட்டும்: "அவர்கள் கஷ்டப்பட்டுழைத்தாலன்றி அவர்களுடைய சீர்மையாவது, செல்வமாவது, பெருமையாவது, பதவியாவது அவர்களுக்கு உண்மையான சந்தோஷத்தைக் கொடுக்க மாட்டாது; தத்தம் வேலையை நன்றாகச்

செய்து முடிப்பதாலுண்டாகும் மனத்திர்ப்தி காரணமாய் வரும் இந்த உண்மையான சந்தோஷம் எளியர், செல்வர், எல்லாருக்கும் பொதுவாகக் கிடைக்தக்கதாயிருக்கிறது"—என்றுசொன்னார். இந்த உண்மையான சந்தோஷத்தை காசு, பணம் கொடுத்து விலைக்கு வாங்கமுடியாது. உயர்ந்த சம்பளங்கொடுத்து வேறொருவனைக்கொண்டு வேலைசெய்வித்துத் தான் அடையமுடியாது. பேர், கீர்த்தி, பெருமை இவைகளால் அடையமுடியாது. இந்த உண்மையான சந்தோஷத்தையடைய ஒரே வழியுண்டு. அது தானாகக் கஷ்டப்பட்டுழைத்தலேயாம். இப்படியுழைக்க தகுந்த வேலையகப்படவில்லையென்று சாக்குப் போக்குச் சொல்வது வீண்வார்த்தையேயன்றி வேறல்ல. ஒவ்வொருவனும் அவனவன் நிலைமையில் அவனவன் கைக்குக்கிட்டிய வேலையைக் குறைவறத் தன் முழுவல்லபத்தோடும் செய்துவருவானாயின் அவன் இந்த உண்மையான சந்தோஷத்தை நரபதிகளாய் சிம்மாதனத்தில் வீற்றிருக்கும் மண்டலேசுவார்களுக்கு ஒப்பாக அனுபவிப்பான். மஹாமண்டலாதிபரும் இவனைப்போல உழைத்தாலன்றி அந்த உண்மையான சந்தோஷத்தையனுபவிக்க அருகராகார். அதற்கு நமது கவர்னர் சொல்லிய உதாரணமே மிகச்சிறந்ததாம். அவர் சொன்னதாவது :—" மிக விசாலமான இந்த பிரிட்டிஷ் இராஜ்யத்தில் சமீபகாலத்தில் கடவுள் பாதாரவிந்தத்தையடைந்த மாட்சிமை தங்கிய விக்டோரியா மஹாராணியவர்களை விடக் கஷ்டப்பட்டுழைத்தவர் இவ்விராஜ்யத்தில் யாருமில்லை. அந்த அம்மணிக்கு அவர் கடைசித்தடவை காயலாவாகப் படுத்துக் கொண்டதுவரையில் ஒரு தினத்தைப்போல பிரதிதினமும் அவருக்கு வேலைநாளேயன்றி வாவுநாள் ஒரு நாளாவதில்லை. நமது விக்டோரியா மஹாராணியவர்களுடைய உதாரணம் ஒன்றினாலே இந்தப் பூலோகத்தில் எவ்வளவு உயர்ந்த பதவிகிடைத்தாலும் விடாமல் தொடுபிடியாய் ஆவலோடுழைத்து வருவது மட்டும் அத்யாவசியமென்றும் உண்மையான சந்தோஷமனுபவிஷயங்களில் இந்தக் கடமையிலிருந்து தப்பினவர் யாருமில்லையென்றும் நீங்கள் அறிந்துகொள்ளலாமே"—என்றார். ஆகையால் எந்த வேலையைச் செய்யத்துவக்கினாலும் அதைப்பழுதறச் செய்துமுடிப்பது கடன் என்றும், விளையாட்டோ, வேலையோ, எதுவானாலும் நீங்கள் செய்வதை உங்கள் பூரணமனதையும் அதில் செலுத்தி அதைக் குறைவறச்செய்துவரப் பழகுவீராகில் இந்த உலகவாழ்க்கை யுங்களுக்கு வரவர சுகமும் சிலாக்கியமுமானதாகுமென்பது நிச்சயமென்று வற்புறுத்திக்கூறி அம்மாணாக்கர்களை யாசீர்வாதம செய்துமுடித்தார். கைக்குக்கிடைத்த வேலையைக்குறைவு வராமல், தன் சக்திமுழுவதையும் செலுத்தி, மனப்பூர்ணமாய் அதில் உழைக்கும் உத்தமகுணம் வாய்ந்தவர்கள் இகத்தில்மட்டுமன்றி பரத்திலும் உத்தமகதியடைவார்களென்பது திண்ணம். எந்த மதத்திலும் கிரியையினால் முத்திபெற்ற புண்யவான்கள் சரிதையை வாசித்துப்பார்த்தால் ஒவ்வொருவரும் தம்தம் வேலையைச் செய்வதிலே அவர்கள் மனது முழுவதையும் செலுத்தி அன்புபூரித்து அருள் பெற்று கடவுளைக் காணும் பெரும்பாக்கியம் பெற்றார்களென்று தெரியவரும். வேடன் வேடுவத்தொழிலையே செய்து ஈசுவர கடாட்சம் பெற்றான். வண்ணான் துணிவெளுக்குந் தொழிலையேசெய்து அப்பாக்கியம் பெற்றான். இப்படியே பெரியபுராணத்தை ஆராய்ந்துபார்க்கின் ஒவ்வொருவரும் அவருக்கிசைந்த ஒரு தொழிலையே பூர்ண ஹிருதயத்தோடும்செய்து பெருங்கருணை வள்ளலான கடவுளைத் தரிசிக்கும் பெரும்பாக்கியம் பெற்றார்களென்று விளங்கும். ஆகையால் கைக்குக்கிடைத்ததைக் குறைவின்றிப் பூர்ண ஹிருதயத்தோடும் பலனை யிச்சிக்காது செய்துமுடிப்பதே எல்லா இன்பத்தையும் கொடுக்கத்தக்க இரகசியமான வழியென்பதை யெல்லாரும் மனதில் வைத்துய்யுமாறு அதை இவ்வளவுதூரம் வற்புறுத்திக் கூறலானோம்.

## பண்டரபுரம்: அதன் வரலாறு

பண்டாபுரம் என்னும் மகிமைபெற்ற விஷ்ணு க்ஷேத்திரம் பம்பாய் இராஜதானியில் ஷோலாப்பூர் டிஸ்திரிக்டில் இருக்கிறது. மஹாராஷ்டிர தேசத்திலுள்ள க்ஷேத்திரங்களில் இது மிகவும் முக்கியமானது. மஹாராஷ்டிரம் 15-16-ம் நூற்றுண்டில் முன்னுக்கு ர்வது மஹாராஷ்டிரர் அதிகாரம் எங்கும்செல்வதற்குக் காரணபூதராயிருந்த மஹான்கள் இந்த க்ஷேத்திரத்திலிருந்து பிரசித்திபெற்று வாழ்ந்துவந்தார்கள். இன்றைக்கும் நாளைக்கும் விஷ்ணு பக்தர்கள் இந்த க்ஷேத்திரத்திற்கு வருஷக்தோறும் ஏராளமாகச்சேர்ந்து பகவன்னுமகீர்த்தனம், பஜனை முதலான கோஷ்டிகளாகக் கூடிச்சென்று பாண்டுரங்கனைத் தரிசித்துவருகிறார்கள். இந்த க்ஷேத்திர விசேஷத்தால் அநேகர் இங்குவந்து பகவத்பக்திசெய்து அருள்பெற்று மோக்ஷசாம்பிராஜ்ய மடைந்தார்களென்று தெரியவருகிறது. இந்த ஸ்தலத்திலுள்ள பாண்டுரங்கர் கோயில் மிகவும் புராதனமானது. இங்கே விஷ்ணுவானவர் பக்திவலையிலகப்பட்டு மீளக் கூடாமல் உலகுய்யுமாறு இருந்த இடத்திலே நிரந்தர ஸ்தாபிதமாக இருக்கநேரிட்டது என்பது ஐதிகம்.

இந்த ஸ்தலம் ஷோலப்பூர் ஜில்லாவில் பீமா நதிக்கரையில் இருக்கிறது. இதற்குப் பூர்வத்தில் சந்திரபாகா நதி யென்கிற பேர் விளங்கியதாகத் தோற்றுகிறது. புண்டரீக பக்தன் என்று பேர்பெற்ற பக்தசிரோமணி மாதா பிதா பூஜைசெய்வதே ஜன்மசாபல்ய மென்று அவ்விரதத்தையே மேலாக அனுஷ்டித்துக் கொண்டு பதிவிரதா சிரோமணியாகிய தன் பத்னியோடும் வாசஞ் செய்துகொண்டிருக்கையில், பண்டாபுரத்துக்கருகிலுள்ள கோபாலபுரம் என்னுமூரில் சந்தராவளி யெனும் ஒரு உத்தமி பகவானையே விவாகம் செய்வேனன்றி மற்றப் பரமசிவனுதியர் என்னைக்குறித்துத் தவஞ்செய்தாலும் நான் அவர்களைக் கனவிலும் நினையேனென்று விரதம்பூண்டு தபசு செய்துகொண்டிருந்தாள். அவள் இந்த விரதம்பூண்டு 30-வயது ஆகும்வரையில் ஸ்ரீ கிஷ்ணபரமாத்மாவினுடைய நாமமன்றி வேறு நாமத்தை மறந்தும் நினையாமல் வெகு உக்கிரமான தபம் செய்துகொண்டுவந்தாள். அப்புண்ணியவதியின் மன உறுதியைச் சோதிக்க வேண்டி பகவான் பரமசிவனுருக்கொண்டு அவ்வரிவையின் முன்சென்று "ஓ பெண்ணே, உன் தவத்துக்கு மெச்சினேன்" உனக்கு வேண்டிய வரத்தைக்கேள் என்று திருவாய் மலர்ந்தருள, அவ்வம்மணி பரமசிவனைப் பணிந்து 'ஓ ஸ்வாமி பகவான்வந்து என்னை விவாகஞ்செய்யும்படியான வரமே யெனக்குத் தேவை' யெனத் தொழுதாள். அதற்குப் பரமசிவன் 'ஸ்ரீ கிஷ்ணபகவானைக்குறித்து இத்தனைகாலம் தபசிருந்து என்ன பலனைப் பெற்றாய். அவர் இப்பொழுது பௌத்தாவதாரமாய் மௌனஸ்திதியை யடைந்திருக்கிறார். அன்றி, ருக்குமணி அவரிணைபிரியாம லிருக்கிறாள். ஆகையால் என்னை விவாகம் செய்துகொள்' என்றார். இது கேட்டு அப்பதிவிரதை முனிவுகொண்டவளாய் 'ஓ ஸ்வாமி பகவானுக்கு மாலையிட நினைத்த என்னை நீர் கோறுவது உத்தமமோ? ஒருவனுக்கு ஐக்கியமான பின் மற்றவனை மறந்தும் நினைக்கலாமோ? விபசாரியைப்போன்ற அபசாரி இவ்வுலகிலுண்டோ! பிறர் மனைவியை இச்சிப்பவர்கள் இரக்ஷிக்கப்படுவார்களோ?" என்று கோபித்து பரமசிவனைப் பலவிதமாக ஏசிப்பேசி உடனே தன்னைவிட்டு அப்புறம் போகாவிட்டால் சபித்துவிடுவதாகச் சொன்னாள். பரமசிவனுருத்தரித்த பகவான் அவளுடைய உறுதிக்கு மனமுவந்து ஸ்ரீ கிஷ்ணபரமாத்மஸ்வரூபமாய்க் காக்ஷிகொடுத்து உன் கற்பைச் சோதிக்கும் நிமித்தமே மயேசுவர ரூபத்துடன் வந்து உன் மனதைக் கொதிக்கச்செய்தேன். ஓ பதிவிரதா சிரோமணியே என்னைக் குறித்து நெடுநாளாய்த் தவஞ்செய்த காரணம்

ஏதோ? உனக்கு வேண்டுமான வரத்தைக் கேள் என்று அருள்நோக்குற்று நின்றார். அப்பொழுது ருக்மணிதேவி பகவானைக்காணாமல் எங்கும் தேடியலைந்து கடைசியில் இவர்களிருவரும் தனிமையாகப் பேசிக்கொண்டிருப்பதைப்பார்த்து, பெண்பாலாதலால் குரோதமேலிட்டு என்ன நடக்கிறதோ பார்ப்போமென்று பக்கத்தில்வந்து பகவானைப் பணியாமல் நின்றுகொண்டிருந்தாள். ருக்மணி இப்படிப் பிணங்கி நிற்பதைப்பார்த்த சந்த்ராவளி மனங்கொதித்து "ஆ ஆ என்னாண்டவனிடம் வந்தும் பேசாமலும் பணியாமலும் இந்த ருக்மணி அகமடைந்திருக்குங் காரணமேன்? ஒரு அரசன் புத்திரிக்கு இவ்வளவு அகங்கார மிருக்கலாமா? 16-ஆயிரம் கோபிகாஸ்திரீகளில் ஒருத்திதானே யிவள்" என்று மதித்துத் துதிக்காமலும் தொழாமலும் எழாமலும், பகவான் கேட்ட கேள்விக்கு உத்தரஞ் சொல்வதற்கு கூடாமலும், இவளேன் இத்தருணத்தில் வந்தாள் என்னும் குரோதத்தால் ஒரு வார்த்தையுமாடாமல் மௌனமாயிருந்தாள். பகவானோ இதுதான் வேடிக்கையென்று இருவருடைய மனோபாவத்தையும் ஆராயக்கருதி ருக்மணியை அழைக்காமலிருந்துவிட்டார். ருக்மணியோ இவர்கள் குற்றவாளிகளானபடியினாலே தேள் கொட்டின திருடனைப்போலிருக்கிறார்கள்: இனி இவர்களைப் பார்க்கக்கூடாதெனத் தீர்மானித்துத் தவஞ் செய்ய யோசித்து ரிஷியாசிரமங்களை யாசித்து அடுத்துள்ள திண்டரவனத்திற் பிரவேசித்து அகோரமான தவஞ்செய்யத் தொடங்கினாள். 30-வயது வரையில் அகோர தவம்புரிந்து ஸ்ரீ பகவானே பிரசன்னமாகி வேண்டியதைக் கேள் என்று சொல்லியும் மனக்குரோதம் முற்றும் நீங்காதகாரணத்தால் சந்த்ராவளிக்கு கைக்கெட்டினது வாய்க்கெட்டாமற் போக நேரிட்டது. இவள் குரோதத்தால் மனமடைந்து மௌனமாயிருப்பதை யறிந்த பகவான் இவளுக்கு ஹிரயசுத்தி பூரணமாக வில்லையென்று அவளை யப்படியே விட்டுப் போக உத்தேசித்து கபடநாடக சூத்திரதாரியாகிய அவர் 'ருக்மணியின் பிணக்கைத் தீர்த்துவருகிறேன்' என்று சொல்லி அம்மாதைச் சம்மதப்படுத்தி திண்டிரவனத்துக்கும் பண்டாபுரத்துக்கும் சமீபத்திலோடும் சந்திரபாகாநதியிலிறங்கி அக்கரை சேர்ந்தார். அக்கரைசேர்ந்த பகவான் அங்கு தாய்தந்தையர்க்கு அன்பாய்ப் பூஜைசெய்யும் பூரண பிரம்மக்ஞானியாகிய புண்டரீக பக்தனைக்கண்டு ஆனந்தங்கொண்டு ருக்மணியை மறந்து அசைவற்று நின்றுவிட்டார். நின்றவர் அந்த பிரம்மக்ஞானியைப் பார்த்து "ஓ புண்டரீகா, தாய் தந்தையர் சேவைசெய்வதற்கு நீயொருத்தனே யிவ்வுலகிற் பிறந்தாய். குருபக்தன் உனக்கு இணையென்றுரைக்கத்தகாது. உனக்கு நீயே ஒப்பாகும். உன்னுடைய விரதத்துக்கு உவந்தேன், உனக்கு அரியசேவை தந்தேன், சீக்கிரம் உனக்கு வேண்டிய வரங் கேட்பாயாக' என்று திருவாய்மலர்ந்தருளினார். அதைக்கேட்ட புண்டரீகபக்தன் தாய் தந்தையர் பூஜையிலிருந்துகொண்டே பகவானை நோக்காமல் நீவிர் யாவரென்று வினவினான். அப்பொழுது பகவான் 'ஓ ஒப்பில்லா உத்தமனே நான் வசுதேவருக்கும் தேவகி தேவிக்கும் மகவாய்ப்பிறந்த பகவானென்று அறிந்துகொள்'ளென, புண்டரீகபக்தன், "ஓ அரிபரந்தாமா நான் நினையாதிருக்கவும் உம்முடைய காக்ஷி தந்தீரோ! சேற்றில் வெகுநேரமாக நின்று நொந்தீரோ! இதோ இச் செங்கல்லின்மேற் சற்றே நிற்பீராயின் மாதாபிதாக்களுக்குச் செய்யும் பூஜையை முடித்து தேவையான வரங் கேட்டுக்கொள்கிறேன்" என்றுரைத்து தாய் தந்தைகட்கு அன்புடன் பூஜைசெய்துமுடித்து அவர்களைக் காவடியிலேந்திக்கொண்டு பகவானைநோக்கி "ஓ ஸ்வாமி என் தாய் தந்தையை வீட்டிற்கொண்டுபோய் அன்ன முண்பித்து வருகிறேன். அதுபரியந்தம் இங்கே யிருக்கிறேனென்னும் வரம் முன்னமளித்து அனுப்புமையா" வென்று துதித்தான். கருணாநிதியான பகவான் அவன்

தான்பூண்ட கடமையைச் செய்வதில் அதி சிரத்தையுள்ளவனு யிருப்பதற்கு உள்ளத்து வந்து அவனைப்பார்த்து "ஓ புண்டரீக பக்தனே, நீ வருகிற பரியந்தம் ஓாடியும் பேர்த்துவைக்காமல் உன் வரவுக்குக் காத்துக் கொண்டிருக்கின்றேன், சீக்கிரம் வருவாயாக" என்று ஆக்ஞாபித்தார்.

புண்டரீக பக்தன் பகவானைத்தொழுது வீட்டிற்சென்று அன்னையப்பனுக்கு அன்னமுதலானவை யூட்டிப்பாராட்டி "ஓ என் தாய் தந்தையே ஸ்ரீ அகிலாண்டகோடி பிரமாண்ட நாயகராகிய ஸ்ரீமன் நாராயணர் சந்திரபாகா நதிதீரத்தில் எழுந்தருளி யிருக்கின்றார். தேவரீர்களுத்தரவுகொடுத்தால் போயவர்களிடம் தேவையான வரம்பெற்றுக் கொள்கிறேன்" எனப் பணிந்துகேட்க,

அவன் மாதா பிதா, "ஓ எங்கள் அரும் பாலனே நீயொருவன் தரிசித்து வரம்பெற்றுக்கொள்ளுதலாற் பிரயோசனமேது! இவ்வுலகிலுள்ளோர் அனைவரும் தரிசித்துக் காட்சியடையும்படியான சூழ்ச்சி செய்வாயாகில் மாக்ஷிமை யடைவாய்" என்றனர். புண்டரீக பக்தன் "மகாபாக்கியம். கட்டளையின்படியே செய்வேன்" என்று அவர்கள் தாள்களில் விழுந்து, இனி விஷ்ணுவை பண்டரியில் தானே தங்கச்செய்வேனென்று உன்னி வீட்டைவிட்டுப் புறப்பட்டுச்சென்றான். போகும்பொழுது அவன் "ஓ ஓ ஸ்ரீமந் நாராயணரைக் கண்ணாரக்கண்டு ஆனந்தங்கொண்டும் இனிப் பெறும்படியான வரமும் வேண்டியதோ" என்றுரைத்துக்கொண்டேபோய் தந்தை சொல் மிக்க மந்திரமில்லை யெனத் தூரத்தில் நின்றபடி பகவானைப் பார்த்துக் கரங்களைக்கூப்பி "ஓ பகவானே எனக்குத் தேவையான வரம் தாங்களிப்படியேநின்று சகலருக்கும் தரிசனந்தந்து காத்து ரக்ஷிப்பதே" யென்றுரைத்துப் பிரார்த்தித்துக்கொண்டான். பிரார்த்தித்தவன் பகவான் அருகிற் சென்றால் வேறு வரந்தந்து மறைந்தருளுவார்; அதனால் தந்தைவாக்குக்கு ஹானிவரும்! ஆண்டவன்முன் வந்தகன்றால் அபசாரத்துக் குட்படவேண்டும்! என்றுன்னிப் பலவாறாக எண்ணி பகவானைப் பார்த்தபடி கைகூப்பி நின்றார். பகவானிடத்திலே மனத்தைநாட்டி அவர் இப்படிநிற்க அவருடைய மனம் விஷயப்பற்றுகளைவிட்டு பகவானிடத்தில் ஒன்றுபட்டு நின்றது. ஒன்றுபடவும் பகிர்முகமாகவிருந்த நோக்கமெல்லாம் பெயர்ந்து அந்தர்முகமாகத் திரும்பிற்று. திரும்பவும் அவர் சமாதி உறுதிப்பட்டு ஸ்வாமிதரிசனத்திலாழ்ந்து பிரமானந்தத்தாற் களிகூர்ந்து சகல சங்கடங்களும் தீர்ந்து தன்னை மறந்து தேகஸ்மரணை யிறந்து அசைவற்றுக் கைகளைக் கூப்பிக் கொண்டு நின்றார்.

பகவானோ இதோ புண்டரீக பக்தன் வந்தான்; நம்மைக்கண்டுகந்தானென் றன்பின் மேலீட்டால அவனுக்களித்த வாக்கின்படி அப்புண்டரீக பக்தன் வரவுக்கு எதிர்பார்த்தபடி அசைவறநின்று அவன் சமாதி யடையுங் காலபரியந்தம் சுயரூபத்துடன் சகலருக்குங் காக்ஷிகொடுத்து, தன் னெதிரில் நின்றபடி சமாதியடைந்த புண்டரீக பக்தனைப்புகழ்ந்து மிகவும் மகிழ்ந்து அவரைப் பார்த்தபடியே சிலாரூபமாக நின்றார். இந்தச்சிலாரூபத்தை இன்றைக்கும் பண்டரிபுரத்தில் காணலாம். பண்டரி யென்னுமூரில் தங்கியிருப்பதால் பண்டரிநாதன் என்றும், ஈட்டென்னும் செங்கல் மேல் நிற்பதால் இடோபா என்றும், 'நீ வந்து வரங் கேட்டுக்கொள்கிறபரியந்தம் இங்கேயே நிற்கின்றேன்' எனப் புண்டரீக பக்தனுக்கு வரமளித்ததால் புண்டரீக வரதன் என்றும் பகவானுக்கு நாமங்களேற்பட்டன. இவருக்கு பாண்டரங்கன் என்றும் பேர் வழங்குகிறது. இந்த ஸ்தலம் காசிக்குப்போகிற மார்க்கத்திலிருப்பதால் தெற்கேயிருந்து ஸ்தலயாத்திரை செய்துகொண்டு காசிக்குப் போகிறவர்களும். அங்கிருந்து தெற்கே ஸ்தலயாத்திரை செய்துகொண்டு வருகிறவர்களும் இந்த க்ஷேத்திரத்

யல் பாண்டுரங்கர் தரிசனம் செய்துகொள் ளாமற் போவதில்லை.

புராணக்கதைகளையும் ஐதிகங்களையும் மேற்பார்வையாக ஆராய்ந்தால் நம்பக் கூடாத அசம்பாவித விஷயங்கள் பொதிந்த பொய்க்கதையாகத் தோற்றும். சூக்ஷ்மமா யறியவேண்டியதை ஸ்தூலமாகப் பார்த்தால் பொய்யாகவும் புனைசுருட்டாகவும் அசம்பா விதமாகவுமே தோற்றும். ஆழ்ந்து நோக்கில் சூக்ஷ்மார்த்தம் வெளிப்படும். அதற்கு ஹிர தயசுத்தியும் ஆத்மவிசார ஞானமும் அவசிய மாம். இந்த ஞான முண்டாவதற்கு என்ன செய்யலாம். உலகவாழ்க்கையி னியல்பை யுணரமாட்டாச் சிறுவர்கள் சொப்புமரப்பாய்ச் சிகளால் அவர்க ளறிந்தமட்டும் இல்வாழ்க்கை நடத்தி விளையாடுவதுபோலவும், அவர்கள் விளையாடுவதற்கு நாம் ஆதரவாயும் அனுகூலி யாயு மிருப்பதுபோலவும் கடவுளின் ஸ்வ ரூபத்தை யறியக்கூடாத பாமர ஜனங்கள் அறியும்படியான பரிபக்குவகாலம் வருகிறபரி யந்தம் மனதை யவ்வழியிற் செலுத்திவர ஏற்பட்ட சாதனங்களாம் இவை. இவ்வுட் கருத்தை யோர்ந்துணர்ந்து ஆராய்ந்தால் இப்புராண ஐதிகங்களில் பொதிந்து மறைந்து கிடக்கும் உண்மையை உள்ளபடி ஆய்ந்தறிய லாம். புண்டரீக பக்தன் பகவான் தரிசனம் பெற்று வரங்கேட்கச் சொல்லியும், அவன் கடமையாகக்கொண்ட தாய் தந்தையர் பூஜை யைமுடித்து வருகிறேன் என்று அவரைக் காக்கவைத்துப் போனான். அதற்குக் கட்டுப் பட்டு "அன்பெனும் வலையிற்பட்டோன்" ஆகி நின்ற பகவான் சற்றுமுன் 30-வருஷ கால மாகத் தவமியற்றித் தரிசனம்பெற்ற சந்திரா வளி வரங்கேட்காது மௌனமாயிருந்த பொழுது ருக்மணியைச் சமாதானப்படுத்தி வருவதாகச்சொல்லி வந்துவிட்டார். அவ் வளவு அக்கறையாக அவள் பிணக்குத்தீர்க்க உத்தேசித்து வந்தவர், புண்டரீக பக்தனைக் காணவும் அவளையும் மறந்து அவன் வலையில் சிக்கி அங்கேயே நின்றார். இதனால் ஹிருதய சுத்தியும் மேற்கொண்ட காரியத்தை என்ன நேரிடினும் குறையின்றி முடித்துத் தீரும் ஆற் றலும் உறுதியும் ஒருவனுக்கு எப்படியும் கட வுள் திருவடிச்சேவை கூட்டிவைக்குமென்றும், அவருடைய கருணாகடாக்ஷத்திற்கு இதுவே நேர்வழி யென்றும் இதனால் விளங்குகின்றது.

'புண்டரீகபக்தன்' என்னும் பேரே ஹிரு தயகமலத்தில் பக்தி பாராட்டுபவன் என்று அருத்தங்கொள்ளும். புண்டரீகம் என்பது தாமரைக்குப் பேர். அது இங்கு ஹிருதயக மலத்தைக்குறித்து நின்றது.

மனிதன் எண்ணம்போல் எதுவும் சம்பவிப்ப தால் அவன் உத்தம எண்ணத்தை யொரு போதும் மறக்கலாகாது. எண்ணினபடி நடப் பது தற்காலத்தில் அசாத்தியமானாலும் அந்த எண்ணத்தைமட்டும் மறக்காதிருப்பானாகில் அவன் அவ்வெண்ணப்படி நடக்கும்படியான திறனடைவது எப்படியும் நிச்சய மென்பது நம்மவர் மனதிற் பதித்துவைக்கத்தக்க மற் றோர் உண்மை. எண்ணமும் நடத்தையும் ஒத் திருக்கவில்லையென்று உயரெண்ணத்தை (ideal)த் தாழ்த்தலாகாது. அது குணக்கேடு விளைக்கும். உயரெண்ணத்துக்குத் தக்கபடி நம் நடத்தையை மேம்படுத்துவதே கடமையாக முயலவேண்டும். அப்படிச்செய்யும் முயற்சி உடனே பலிக்காவிட்டால், பின்னும் பின்னும் பிரயத்தனம் செய்யவேண்டுமன்றி அதைரி யத்துக் கிடங்கொடுத்து, இப்படி நடப்பது அசாத்தியமென்று நினைக்கக்கூடாது. யேசு கிறிஸ்து போதித்த மேலான உண்மைகள் இக்காலத்து உலகவியற்கைக்கு ஒவ்வா தென்று பலர் அவரது திருவாக்கை அனுஷ் டிக்கத்தகாததாகத் தள்ளுகிறார்கள். இப்ப டித் தள்ளுவதினாலேயே கிறிஸ்து மதத்துக் குப் பெருங்குறைவு விளைக்கிறார்கள். மரு மகளை வாழ்த்தி அவள் மாங்கல்யத்தை வாங் கினாற்போல் கிறிஸ்துவைக் கொண்டாடி அவர் சத்தியவாக்கை யனுஷ்டிக்காது புறக்கணிப்

பது என்ன பக்திபோ! ஹிந்து மதஸ்தர்களும் உண்மையை யறியாமல் சத்திருக்க சக்கையைத் தின்பாரைப்போல், உண்மையை யோர்ந்துணருவதற் குபாயமாகச் சொல்லிய கருமங்களை, அதை யனுசரித்தலே ஒரு முடிவாகவெண்ணி, மூடபக்தியில் வீழ்ந்து மதிகெட்டுக் கதியையும் இழக்கிறார்கள். ஆகையால் எல்லவரும அவரவர் மதத்திலிருந்துகொண்டே உண்மையை உள்ளபடி யோர்ந்துணர்ந்து சத்தியத்துக்குக் கட்டுப்பட்டு மனச்சாக்ஷிக்கு ஒப்பாக நடந்துகொள்ள வேண்டும். அப்படி நடந்துகொண்டால் ஒருவரையொருவர் இகழ நிமித்தமின்றி யெல்லாரும் உண்மையில் ஒற்றுமையாகவிருந்து ஒருவரையொருவர் நேசித்துவாழலாம்.

---

## ஆநந்தவல்லி.

### ஓர் உண்மையான கதை.

### IV

"ஊடுவதுணர்வதுற்ற கலவிமங்கையரையுள்கி
வாடுவதடியில்வீழ்ந்து வருந்துவதருந்தவம்பின்
கூடுவதுணர்வுகெட்டுக் குணமெலாம்வேட்கையேயாய்
நீடுவதின்பமுத்தி யித்தினின்றார்கள்முத்தர்."

போகநல்லூர் என்னும் கிராமத்தின் குளக்கரையில் வண்டிக்காரக் கருப்பனையும் அவன் தோழனையும்விட்டு அந்ததீர்த்தக்கரை மஹாத்மியத்தை நாம் கண்டமட்டும் குறிப்பிட்டுவிட்டோம். சென்ற அதிகாரத்தில் நாம் பிரஸ்தாபிக்க நேரிட்ட கிராமத்தின் பேர் போகநல்லூர் என்று ஒற்றைக்கடை தொப்பைய செட்டி சொல்லத் தெரிந்துகொண்டோம். அவ்வூரில் அனேக வருஷங்களுக்குமுன் ஒரு பெரிய மஹானிருந்தார். அவர் தேகமே யாத்மா, போகமே முத்தி யென்கிற கொள்கையுடைய லோகாயத மதத்தைச் சேர்ந்தவராயிருந்தபடியால் அவர் அக்கொள்கையை யனுசரித்து அங்கே தேவேந்திரபோகமனுபவித்துக்கொண்டிருந்ததன்றி மற்றவர்களும் அக்கொள்கையை யனுசரிக்கும்படி வேண்டிய முயற்சிசெய்து வந்தார். அவர் காலத்தில் அவ்வூரைப்பார்த்தால் இந்திரலோகம்போல் விளங்கும். மாடமாளிகைகளும் கூடகோபுரங்களும் விசேஷமாயிருந்தன. அவருடைய எண்ணங்களை யெல்லாம் இகலோகசுக மனுபவிப்பதிலே செலுத்திவந்ததால், அவர் ஏராளமான ஐசுவரியம் சேகரித்து அதை நவநவமாக போகமனுபவிப்பதில் செலவிட்டு வந்தார். "மதிநிலா நுதலாரோடு மணிநிலா முன்றிலேறி, முதிர்நிலா வெறிப்பச்செவ்வா யிளநிலா முகிழ்ப்ப" மாதர் போகமனுபவிப்பதே இந்த ஜன்மமெடுத்ததற்குப் பயன் என்று எண்ணினவராதலால் அவ்வெண்ணத்தை நிறைவேற்ற தேசதேசங்களிலிருந்தும் அழகின்மிக்க மாதர்களைக் கொணர்ந்து மாடமாளிகைகள்கட்டி யவர்களை யமர்த்தி அவர் மனம் மாறுபடுவதற்குத்தக்கபடி அவ்வக்காலத்துக்குகந்த மாதரை யடைந்து இந்திரியசுக மனுபவித்து வந்தார். அவர் காலத்தில் தேசதேசங்களிலிருந்துவந்த மாதர்களோடு வர்த்தகர்களும் வியாபாரிகளும் திரளாக வந்து அங்கு குடியேறினர்கள். அசன, சயன, கான போகங்களுக்கெல்லாம் அவ்வூர் அக்காலத்தில் மிகப்பேர்போனதாயிருந்தது.

அனந்தமோஹன் என்றும் யோஹாநந்தன் என்றும் பேர்விளங்கிய அந்த மஹான் ஸர்வபோகங்களையு மனுபவித்து ஒரு குறைவுமின்றி நெடுநாள் வாழ்ந்திருந்தான். கடைசியில் அந்திகாலம் வந்தபொழுது அவனுக்கு மூப்பு மேலிட்டு இந்திரியங்களெல்லாம் ஒன்றொன்றாக வொடுங்க, வியாதிகள் பல அவனைப் பீடிக்க, அவன் முன்னனுபவித்த போகங்களையெல்லாம் வெறுத்து தான் போகும்வழியின்னதென்று தெரியாமல் மனம் பதைத்து எங்கு பார்த்தாலும் ஒரே இருட்படலம் பரவியிருக்கிறதென்று சொல்லி மிக வாதைப்பட்டு

வருந்தினன். பிறகு இவன் மரணாந்தகாலத்தில்பட்ட அவஸ்தையைக் கண்டு எல்லாரும் திகில்பட்டு இவன் கொள்கையை நம்பாமல் தெய்வமொன்று இருக்கிறதென்று நினைத்து "கோயிலில்லாவூரில் குடியிருக்கலாகாது" என்னும் மூதுரையை நம்பி அந்த வூரிலும் குடியிருக்க அஞ்சி மூலைக்கொருவராகக் கலைந்துபோய்விட்டார்கள். அவர்கள் இப்படி கலைந்துபோகவே அந்த வூரின் மகிமையும் குலைந்துபோய்விட்டது. அங்கங்கே வெளியே போனவர்கள் அவர்களோடுகூட தாங்கள் சேர்த்துவைத்திருந்த பெருந்தனத்தை வாரிக்கொண்டு போய்விட்டதால் அது செல்வங் குறைந்து வறுமை மேலிட்டு பிரஸ்தாபகாலத்தில் அதிசாமான்யமான ஒரு பட்டிக்காடாக பட்டிருந்தது. தனமும் கனமும் குறைந்து போனாலும் எஞ்சியுள்ளவர்கள் சுற்றுப்பக்கத்தூர்களிலுள்ளவர்களைவிட அழகில் மிகுந்தவர்களாக விருந்தார்கள். இப்பொழுதுள்ள ஒரே கடையில் அவ்வூர் ஏழைஜனங்களுக்கு வேண்டிய பலசாக்குகள் யாவற்றையும் வாங்கி வைத்துக்கொண்டு அதில்வரும் சொற்ப லாபத்தைக்கொண்டு அற்ப ஜீவனம் செய்யும் தொப்பைய செட்டி, ஆதியில் அவ்வூருக்குக் குடிவந்த தனஞ்சய செட்டியாருடைய பாரம்பரையிலுதித்தவன். தனஞ்சய செட்டியார் நவரத்னங்களில் வியாபாரம் செய்து மிக்க தனவானாக விளங்கினர். அவர் சந்ததியிலுதித்த தொப்பையசெட்டி நவதானியங்களில் சில்லரை வியாபாரம் செய்து வயிறு வளர்ப்பது கஷ்டமாய்க் காலத்தைத்தள்ளி வருகிறான். இந்த ஊர் அழகுக்குப் பேர்போனதால் சுற்றுக்கு வெகுதூரத்திலுள்ள போக புருஷர்கள் இவ்வூருக்கு மன்மதன் திருவிழாக்கொண்டாட வசந்தயாத்திரை வருவதுண்டு.

வண்டிக்காரக் கருப்பனுக்கு இந்த விர்த்தாந்தங்களெல்லாம் நன்றாகத் தெரியும். அவனிடத்தில் வண்டிபேசினது தேவிபுரத்துக்குப் போகவானாலும், இந்த வூரில்தான் தங்க வேண்டி நேரிடுமென்பது அவனுக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் அவ்வளவு தூனுக்காக அவன் பேசினான். இது நிற்க.

சூரியோதயமாகவும் ஸ்திரீ புருஷர்கள் ஸ்நானத்திற்குப் போகிறவர்களும், ஸ்நானம்செய்து வருகிறவர்களுமாக எல்லாரும் வெளிப்புறப்பட்டுவிட்டார்கள். வழியில்கூட ஒருவரையொருவர் கண்டு தண்ணீர்க்கரை இரகசியம் வீட்டு இரகசியங்களை ஒருவர்க்கொருவர் சொல்லி இரகசியம்மாற்றிக்கொண்டு போனார்கள். அப்பொழுது ஸ்நானம்செய்து வந்தவர்களில் ஒருவர்மட்டும் யாரையும் கண்டு பேசாமல், பட்டுவஸ்திரமுடுத்து, பட்டை பட்டையாகத் திருநீறு சாற்றிக்கொண்டு கழுத்து நிறைய ருத்திராக்ஷமும் கையில் சொம்புஸ்தாலியும் விளங்க, "சாம்ப சிவ சிவ" என்று வாய் சாம்பசிவ ஸ்மரணைசெய்ய கீழே பார்த்தவண்ணம் எறும்புப்புற்று மத்தியில் நடப்பவர்போல் குதிகால் கீழேபடாது தாண்டித்தாண்டிக் குதித்துக்கொண்டு சென்றார். எதிரே ஸ்நானத்திற்குப்போன ஒரு வயோதிகர்மட்டும் இவரைக் கண்டதும் கையைத்தூக்கி அஞ்சலிபந்தனம் செய்து "சாம்பமூர்த்தே ஹரிః" என்று வந்தனம் செய்து "எப்பொழுது வந்தாப் பலே" என்று விசாரித்தார். அவருக்கு சாம்பமூர்த்தி சிவம் "ஹரிః நமஸ்காரம்" என்று பதில் வந்தனமளித்து "அகத்திற்குப்போகிறேன், ஸ்நானம் செய்து வாருங்கள், பேசிக்கொள்ளலாம்" என்று சொல்லி முன்போல் நடந்துபோனார்.

இந்த வயோதிகர்பேர் காமேசுவர தீக்ஷிதர். இவர் அவ்வூருக்கெல்லாம் ரதிபோன்ற மோஹனாம்பாளின் தகப்பனார். இவர் குடும்பம் அழகுக்குப் பேர்போனதானாலும் ஐசுவரியத்திற்கு வீங்கினதாயிருந்தபடியால் அடுத்துள்ள பாப்பாரப்பட்டியிலிருக்கும் ஒரு ஏழைப்பிராமணனுக்குத் தன் பெண்ணைக்கொடுக்க நேரிட்டது. இவர்களுக்கு ஐசுவரியமின்றி அழகு மிகுதியாயிருந்ததால், ஊரிலுள்ளவர்களெல்

லாம் இவர்களை யதற்காகத் தூற்றிப்பேசுவது வழக்க ருந்தது. நமது சாம்பமூர்த்தி சிவ ருக்குவந்தால் இவர்கள் வீட்டிவோகவெல்லுவது வழக்கம். "வெறும் வாயை மெல்லுகிறவள் அவலகப்பட்டால் சும்மா விருப்பாளா?" என்கிற பழமொழிப்படி, ஊரிலுள்ளவர்கள் ஏற்கனவே இவர்கள் அழகைக் கண்டு வயிறெறிந்து தூற்ற, இந்த சந்தர்ப்பத்தில் சும்மாவிருப்பார்களா? அதற்கேற்றாற்போல் நமது சாம்பமூர்த்தி சிவம் பெரிய இடத்துமனுஷர். மடாதிபதி ஸ்தானத்திலிருப்பவர். மிக்கபொருள் சகாயமுள்ளவர். குணத்திலும் சிறந்தவரென்றே சொல்லவேண்டும். இவர் மடாதிபதியாயிருந்து இவருடைய சிஷ்யவர்க்கங்களுக்கு மோக்ஷவழி காட்டுகிறது இவர் தொழிலாயிருந்தாலும், இவர் மட்டிற்கு வேறு சொந்தக்கொள்கையுடையவராயிருந்தார். இவருடைய குணவிசேஷங்களைப்பற்றி விஸ்தரித்தெழுத இது தருணமன்று. ஆனால் இவர் மடாதிபதியென்றும் தனக்கொரு கொள்கை தன் சிஷ்யர்களுக்கொரு கொள்கையுடையவரென்றும் தெரியவந்ததால், இவருடைய மேல்வேஷங்களையெல்லாம் நீக்கி யுள்ளபடி இவரை இக்கதையை வாசிப்போர் அந்தரதர்பாரில் நிறுத்துவது நமது கடமையாக விருக்கிறது. அதி நுட்ப யோசனையோடு செய்யப்படவேண்டிய இக் கடமையை அதி சூக்ஷ்மமாகவே நாம் செய்து முடிப்போம். அவருடைய வெளியாடம்பரங்கள், விருதுகள், கொடிகள், வேஷங்கள், வார்த்தைகள் எல்லாவற்றையும் நீக்கிவிட்டு அவருள்ளத்தை யுள்ளபடியாராய்ந்தால் அவருடைய கொள்கைகள் அவ்வூருக்கும் பேருக்கும் பின்வரு மோர் சமயக்கொள்கைக்கு மொத்ததாயிருக்கும்.

"மின்னனைய பொய்யுடலை நிலையென்று மையிலகு
வழிகொண்டு மையல்பூட்டும்
மின்னார்க ளின்பமே மெய்யென்றும் வளர்மாட
மேல்வீடு சொர்க்கமென்றும்
பொன்னையழி யாதுவளர் பொருளென்று போற்றி
பொய்வேட மிகுதிகாட்டிப் [யிப்
பொறையறிவு துறவீத லாதிநற் குணமெலாம்
போக்கிலே போகவிட்டு"

கண்டதேகாக்ஷி, கொண்டதே கோலம் என்று காலத்தைப் போக்கும் லோகாயதசமயக் கொள்கை அவர் புத்திக்குகந்ததும் உண்மையுமாக விருந்தது. அவருண்மையென்றுணர்ந்ததை யுள்ளபடி யனுஷ்டித்துவந்தார். அந்தமட்டில் அவர் உள்ளும் புறமும் ஒக்க நடந்தது அவர் தீரத்தை வெளியிட்டது. அவ்வளவு தீரமுடையவர் வெளிவேஷம் போடுவானேனென்றாலோ, இவ்வுலகில் வெளிவேஷம் போடாதவர் யாரிருக்கிறார்கள். ஒவ்வொருவனும் அவனவன் தொழிலுக்குத் தக்க வேஷம் போட்டாடியே பிழைக்கிறான். அப்படியிருக்க இவரைமட்டும் அதற்காகக் குற்றஞ் சாட்டிக் குறைகூறுவது உண்மையைச் சொல்ல உடன்பட்ட நமக்கு எப்படி சாத்தியமாகும். உள்ளதை யுள்ளபடி சொல்லி இக் கதையை முடிக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். தள்ளக்கொள்ள இஷ்டமுள்ளவர்கள் தள்ளவேண்டியதைத் தள்ளிக்கொள்ளவேண்டியதைக்கொள்ளலாம். அவர்களைத் தடுப்பார் யாருமில்லை.

ஸத்தியசந்தன்.

## "ஆபூ பென் ஆடம்."

(Translated by Pundit P. R. Krishnamachari at the request of Mr. P. R. [illegible] Vianatha Iyer, B. A, of the Puducotta State.)

பேரோங்கும் ஆபூபென் ஆடமென்பான் (அவன்குலந்தான் பெருகி வாழ்க)
காரோங்கும் ஓரிரவி லினியநெடுங் கனவினின்றுங் கண்வி ழித்துச்
சீரோங்கும் கமலமென ஒருதேவன் தன்னகத்தைச் செவ்வி தாக்கி
ஏரோங்கும் பொற்றகட்டி லெழுதிவர நிலாவெளிச்சத் தினிது கண்டான்.

மிக்கிருந்த அமைதியினாற் பென்ஆடம் மனவெழுச்சி மேவி யாங்கட்
புக்கிருந்தான் றனைநோக்கி 'யென்னைவரைந் திடுவ' தெனப் புகல வன்னான்
தொக்கிருந்த பேரின்பப் பார்வையுடன் குனிந்ததலை தூக்கி 'ஐய!
தக்கிருந்த இறையவனுக் கன்பர்பெயர்' என்னவிடை தந்தான் மாதோ.

'ஆனவையி லெனதொன்றோ' எனஆபூ வுரைத்திடவும் 'ஆகாது' என்று
வானவனு மறுத்துரைத்தான்; அதுகேட்டுக் குரல்தணிந்தும் மலர்ச்சி நீங்கான்
'மானவ! மற் றுயினெனைத் தன்னொக்கும் மானிடர்கள் மாட்டுச் சிந்தை
போனவனென் றெழுதிடுவான் பணிகின்றேன்' எனவவனும் பொறித்துப் போனான்.

அடுத்தவரும் இரவுதனில் அத்தேவன் மறுபடியும் அந்த வீட்டிற்
படுத்தவரும் எழும்படியாம் பேரொளியி னொடும்போந்து பரமற் கன்பு
தொடுத்தவருங் காரணத்தாற் பேறடைந்தோர் பெயரையெலாம் சொற்றானென்னே!
எடுத்தவரும் பெயர்கடமிற் பென்ஆடம் பெயரேமுன் னிருந்த தம்மா.

---

## * ABOU BEN ADHEM.

Abou Ben Adhem (may his tribe increase)
Awoke one night from a deep dream of peace,
And saw, within the moonlight in his room,
Making it rich, and like a lily in bloom,
An angel writing in a book of gold:—
Exceeding peace had made Ben Adhem bold,
And to the presence in the room he said,
"What writest thou?"—The vision raised its head,
And with a look made of all sweet accord,
Answered, "The names of those who love the Lord."
"And is mine one?" Said Abou. "Nay, not so,"
Replied the Angel. Abou spoke more low,
But cheerly still and said, "I pray thee, then,
Write me as one that loves his fellow-men."
The Angel wrote, and vanish'd. The next night
It came again with a great wakening light
And show'd the names whom love of God had bless'd,
And lo! Ben Adhem's name led all the rest.

—*Leigh Hunt.*

## பூர்வீக ஆரியர்களின் இல் வாழ்க்கை நிலை.

ஆரியர் அநேகவருஷங்களுக்கு முன்பு மத்திய ஆசியாவினின்று அந்நிய தேசங்களைப் பிடித்து குடியேறக்கருதி சிந்து நதியைக் கடந்து அதன் கரையில் பட்டணங்களைக் கட்டிக்கொண்டு வாசஞ்செய்து வந்தார்கள். இவர்கள் ஐந்து வம்சங்களாகப்பிரிந்து சிந்து நதியின் உபநதிகளில் இருந்ததற்கு இருக்கு வேதத்தில் "பஞ்சக்கிருஷ்டி" "பஞ்சக்கியான" என்று சொல்லப்பட்டுள்ள வார்த்தைகளாலும் சிந்து நதியைப்பற்றிய தோத்திரங்களாலும் நன்கு விளங்குகின்றன. வியவசாயம், கன்று காலிகள் பரிபாலித்தல் முதலியவைகளை முக்கிய தொழிலாகக்கொண்ட இவர்கள் தான் ஹிமாசலம் முதல் கன்னியாகுமரிவரை பரவியிருக்கும் இந்துக்களின் முன்னோர்களென்பது திண்ணம். மேலே சொன்ன ஆதிகாலத்திய இந்துக்களின் ஆசாரம், இல்லறம், நடை, உடை, பாவனைகள் எல்லாம் தற்காலத்திலுள்ளவர்களின் நடவடிக்கைகளுக்கு முற்றிலும் மாறுபாடாயிருந்தன. எவ்வாறெனில், ஜாதி பேதம், வகுப்பு வேற்றுமை, இன்னும் சில அருவருக்கத்தக்க பல நிபந்தனைகளும் கோட்பாடுகளும் கிடையாது. தேகவலியுடைய நம் முன்னோர்கள், சத்துள்ள பலவித ஆகாரங்களை உட்க்கொள்வதிலும் கடல் யாத்திரை செய்வதிலும் வெகு பிரியமாக இருந்தார்கள். இருஷிகள் என்றால் நமது தற்காலத்து அபிப்பிராயத்திற்குத் தக்கபடி காடுகளில் வசித்து கடுந்தவம் புரிகிறவர்களென்பது பிசகு. அவர்களும் சாதாரண ஜனங்களே யன்றி வேறல்ல. அவர்கள் வீடுவாசல்களை கட்டிக்கொண்டும், ஆடு மாடுகளைப் பரிபாலித்துக்கொண்டும், வியவசாயம் செய்துகொண்டும் இந்தியாவின் பூர்வகுடிகளாகிய இராக்கதர்களோடு யுத்தம் செய்துகொண்டும் காலங்கழித்து வந்தார்கள். ஒவ்வொரு வீட்டுயஜமானனும் ஒருஇருஷியே. வீடுகளில் தங்கள் குடும்பசகிதமாய் தெய்வங்களைத்தொழுவது வழக்கம். இவர்களில் விசேஷ கல்விப்பயிற்சியுடையவர்களை தனவான்களும் அரசர்களும், வரவழைத்துப் பரிசளிப்பதுண்டு. இருக்குவேதமுண்டாக்கினவர்களாகிய இருஷிகள் இவர்களே யன்றி வேறல்ல. இவர்கள் ஜனங்களோடு கலந்து, கல்யாணமுதலான சம்பந்தங்களைச்செய்துகொண்டு வேண்டியபோது யுத்தத்திற்கு சகாயமாகப் போய்க்கொண்டு இல்லறவாழ்க்கையை முற்றிலும் நடத்திவந்தார்கள். ஒரு இருஷியானவர் தனக்கு சத்துருக்களை ஜெயிக்கும்படியான ஒரு புத்திரன் வேண்டுமென்றும், மற்றொருவர் புத்திரனும், ஐஸ்வரியமும், பூஸ்திதியும் தான் அடையவேண்டுமென்றும், இன்னுமொரு இருஷி தனக்கு ஐஸ்வரியம், ஏராளமான பொன், குதிரைகள், பசுக்கள், மிகுதியான வெள்ளாமை, விசேஷசந்ததி அனுக்கிரகம் பண்ணவேண்டுமென்றும் தெய்வங்களைப் பிரார்த்தித்ததாக இருக்கு வேதத்தில் 5, 6, 9-வது மண்டலங்கள் முறையிடுகின்றன. இதனால் இருக்கு வேதமுண்டான காலத்தில் சாதாரணமான ஜனங்களுக்கே இருஷிகளென்று பொருள்படுகின்றது. பயிரிடுவோர், க்ஷத்திரியர் என்ற தனித்தனிவகுப்பார் இருந்ததாகவே சொல்ல அக்காலத்தில் சற்றேனும் இடமில்லை. பக்ஷபாதமின்றி படிக்கும் எவருக்கும் ஜாதிபேதமிருந்ததென்று சொல்ல பதினாயிரம் சுலோகங்களடங்கிய இருக்கு வேதத்தில் இடமேயில்லை.

இந்த ஒரு விஷயம் தவிர வியவசாயம், கைத்தொழில் இராக்கதரோடு சண்டைசெய்தல், கிரகஸ்தன் அனுசரிக்கவேண்டிய விதிகள், ஸ்திரீகளின் கடமையும் தாரதரமும், மதாசாரங்கள், அக்காலத்தில் தெரிந்தவரை வானசாஸ்திரம்; இவைகளை எல்லாம் பற்றி விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கிற வேதத்தில் இந்த ஜாதிபேதத்தைப்பற்றிமாத்திரம் எழுதாமல் விடப்பட்டிருப்பது விந்தையே. "வர்ண" என்ற வடமொழிப்பதத்திற்கு ஜாதி யென்று

இப்பொழுது பொருள் வழங்கி வருகின்றது. ஆனால் இருக்கு வேதத்தில் இராக்கதருக்கும், ஆரியருக்கும் உள்ள வர்ண பேதத்தைக்குறிக்க ஏற்படுத்திய சொல்லாகும். ஆகவே பிரிவினையே அவர்களுக்குள் கிடையாதென்பது 3-வது மண்டலத்திலும், க்ஷத்திரிய ஜாதியைக்குறிக்கும், "க்ஷத்திரிய" என்னும் பதமானது தெய்வங்களுக்கு அடைமொழியாக "பராக்கிரமமுள்ள" என்னும் பெயருரிச்சொல்லாக 7-வது மண்டலத்திலும், ஆசாரியர் என்று தற்காலத்தில் பொருள்படும் "விப்பிர" என்னும் பதம் "ஞானமுள்ள" என்ற பெயருரிச்சொல் அர்த்தத்தோடு தெய்வங்களுக்கு ஓர் அடைமொழியாக 8-வது மண்டலத்திலும், "பிராமண" சப்தத்திற்கு "கவிபாடுவோர்" என்ற அர்த்தத்தோடும் இருக்கு வேதத்தில் அனேக இடங்களில் வழங்கித் துலங்குகின்றன. இன்னும் அனேக திருஷ்டாந்தங்கள் எழுதக்கூடும். 9-வது மண்டலத்தில் ஒரு இருஷியானவர் பின்வருமாறு தன்னைப்பற்றி ஒருவாறு முறையிடுகின்றார்.

"இந்திரனுக்காக என்னால் வரிக்கப்பட்ட ஓ சோமரசமே கேளாய். நான் கவிகள்பாடுவோன். என் தகப்பனார் ஒரு வபித்தியன். என் தாயார் தானியங்களை உடைத்து மாவாய்த் திரிப்பவள் எங்களில் ஒவ்வொருவருக்கும் நானுவித வேலைகள் ஏற்பட்டிருக்கின்றன. புலங்களில் மாடுகள் திக்குகளிலெல்லாம் மேய்வதுபோல பற்பல தொழிலைச்செய்து ஐஸ்வரியத்தின் பொருட்டு உம்மை வணங்குகின்றேன்." மேலே சொன்ன ஒரு உதாரணத்தினாலேயே ஜாதிபேதமில்லை என்பது ஏற்படுகிறது. ஏனெனில் ஒரே குடும்பத்தார் பலவிததொழில்களைச் செய்து வந்தார்கள். ஆதிகாலத்திலேயே ஜாதிபேதம் உண்டென்று சொல்லவேண்டிய அபிமான மிருந்தசிலர் விஸ்வாமித்திரர்போரில் வல்லவராயும் கவிபாடும் திறமையுடையவராயும் இருந்தமையால் இவர் முதலில் க்ஷத்திரியராக இருந்தாரென்றும் பின்பு பிராமணனாக தன்னைத் தபோமகிமையால் செய்துகொண்டாரென்றும் ஒரு புராணக்கதையை பிற்காலத்தில் உண்டுபண்ணிக் கொண்டதாக தெரியவருகின்றது. இவ்வாறு செய்யவேண்டிய அவசியமே இல்லை. விஸ்வாமித்திரர் க்ஷத்திரியனுமல்ல, பிராமணனுமல்ல. அவர் ஒரு வேதமுண்டாகிய காலத்துள்ள ஒரு இருஷி. பிராமண க்ஷத்திரிய என்ற பேதம் ஏற்படுமுன்னரே அவர் போர் வீரராயும் ஆசாரியராயும் இருந்தார். ஒவ்வொரு குடும்பத்தின் தலைவனே ஆசாரியனாக இருந்தான். வீடே அவனுக்கு கோவில். விக்கிரகங்களை ஆராதனை செய்வது கிடையாது. அவரவர்கள் வீட்டிலேயே அக்கினியை வளர்த்திக்கொண்டு மந்திரங்களை உச்சரிப்பது வழக்கம். கூட்டமாய்ப்போய் ஒரு பொது இடத்தில் சேர்ந்து தொழுததாகக் காணோம். ஸ்திரீகள் ஆராதனைக்கு வேண்டிய பூஜாத்திரவியங்களாகிய பணியாரம், சோமரசமுதலியவைகளைத் தயார்செய்துகொண்டு தாங்களும் தங்கள் கணவர்களோடும் தெய்வங்களைத் தொழுது நற்கதி அடைய விரும்பினதாக 1, 5-வது மண்டலங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

(இன்னும் வரும்.)

அ. க. சிவராம ஐயர்.

---

## ஸ்ரீதத்துவபோதம்.

---

ஸ்ரீசங்கர பகவற்பாதாசாரியாரால் அருளிச்செய்யப்பட்ட இந்த "தத்துவபோதம்" என்னும் நூல் உண்மையை உள்ளபடி விளக்குவதாயிருக்கிறது. இதன் சாரத்தை சார்லஸ் ஜான்ஸ்டன் என்பவர் அங்கிலேய பாஷையில் தெளிவாக வெழுதி வெளியிட்டிருக்கிறார். ஐரோப்பியர்களும் அமெரிக்கர்களும் தத்துவவிசாரம்செய்து அனாதிகாலந்தொட்டு இவ்வாயிரி வர்த்தத்தில் நமது இருஷிகள் தம் ஸ்வானுபவ ஸ்வாத்மதரிசன மகிமையால் வெளியிட்ட தத்துவமஹாத்மியத்தை அங்கியர்களும்

ஆராய்ந்தறிய முப்பற்சிக்க அவர்கள் சந்ததியா ரான நாம் ஆத்மவிசாரம் செய்யாது அலக்ஷிய மாயிருப்பது நமக்கு வெட்கமல்லவா.

இதிலடங்கிய வுண்மைகளை விரித்துரைக் கில் மிகப்பெருகுமாதலாலும் ஸ்ரீமத் சங்கரப கவற்பாதாசாரிய ஸ்வாமிகள் மிகவிளக்கமா யும் சுருக்கமாயும் சொல்லியிருப்பதற்குப் பங் கம் வருமாதலாலும் இங்கே அவர் வாக்கைத் தமிழில் மொழிபெயர்த்துப் பிரசுரித்திருக்கிற பிரகாரம் கீழே அச்சிடுகிறோம். பிந்தியதி லடங்கிய தத்துவவிசேஷங்களைச் சமயம் நேர்ந் துழியெடுத்து விவரித்துப் பேசுவோம். தஞ்சைமாநகரம் ஸ்ரீகுப்புஸ்வாமிராஜு அவர் கள் இதைத் தமிழில் மொழிபெயர்த்துப் பிரசு ரித்ததினால் தமிழ் நாட்டுக்கு அவர் செய்த உதவிமதிக்கற்பாலதன்று. அவர் செய்த இப் பேருபகாரத்துக்காக பகவான் அவருக்கு அருள்புரிவாராக. இந்நூல் வினாவிடை ரூப மாகவிருப்பதால் வாசிப்போருக்கு விஷயம் துல்லியமாக விளங்குமென்று எண்ணுகிறோம்.

நூல்.

சாதன சதுட்டய சம்பன்னர்களாகிய அதி காரிகளுக்கு மோக்ஷசாதனமாகிய தத்துவவி வேகப்பிரகாரத்தைச் சொல்லுவாம்.

---

I. சாதன சதுட்டயம்.

வினா:—சாதன சதுட்டயமென்பது யாது?

விடை:—(க) நித்தியாநித்திய வஸ்து விவே கம் (நித்திய அநித்தியப் பொருள்களைப் பகுத் தறிதல்), (2) இகாமுத்திரார்த்த பலபோக விராகம் (இம்மை மறுமைப் பயன்களாகிய போகங்களில் இராகமின்மை), (௩.) சமாதி சட்சம்பத்தி (சமமுதலிய ஆறினடைவு), (௪) முமுக்ஷுத்துவம் (மோக்ஷத்தை விருப்புதல்) என்பனவாம்.

வினா:—நித்தியாநித்தியவஸ்துவிவேகம் என் பது யாது?

விடை:—ஒன்றாகிய பிரமம் நித்தியபொ ருள்; அதற்கு அந்நியமான யாவும் அநித்தி யப்பொருளா மென்னும் இதுவே நித்தியாநித் திய வஸ்து விவேகமாம்.

வினா:—விராகமென்பது யாது?

விடை:—இகலோக பரலோக போகங்க ளில் இச்சையில்லாமையாம்.

வினா:—சமாதிசாதன சம்பத்தி யென்பது யாது?

விடை:—சமம், தமம், உபாதி, திதிக்ஷை, சிரத்தை, சமாதானம் என்பனவாம்.

வினா:—சமம் என்பது யாது?

விடை:—சமமென்பது மனதை யடக்குத லாம்.

வினா:—தமம் என்பது யாது?

விடை:—கண்முதலிய புறவிந்திரியங்களை யடக்குதல் தமமாம்.

வினா:—உபாதி என்பது யாது?

விடை:—உபாதியென்பது சுவதர்ம அநுஷ் டானமேயாம். அதாவது பாகியதர்மங்களி னின்றும் நிவர்த்தியாதலே யாம்.

வினா:—திதிக்ஷையென்பது யாது?

விடை:—சீதம், உஷ்ணம், சுகம், துக்கம் முதலியவற்றைச் சகித்தல் திதிக்ஷையாம்.

வினா:—சிரத்தை யென்பது யாது?

விடை:—குருவாக்கியம் வேதாந்த வாக்கி யம் முதலியவற்றில் உண்டாகும் விசுவாசம் சிரத்தையாம்.

வினா:—சமாதான மென்பது யாது?

விடை:—சித்த ஏகாக்கிரத்தன்மை (மன வொருமை) சமாதானமாம்.

வினா:—முமுக்ஷுத்துவம் என்பது யாது?

விடை:—மோக்ஷம் எனக்கு உண்டாக வேண்டுமென்னும் இச்சை முமுக்ஷுத்துவ மாம்.

இது, சாதனசதுட்டயம். இதனை யுடைய வர் தத்துவ விவேகத்திற்கு அதிகாரிகளாகின்றனர்.

---

## II. தத்துவவிவேகம்.

வினா :—தத்துவ விவேகமென்பது யாது?

விடை :—ஆத்மா சத்தியம், அதற் கந்நிய மான யாவும் மித்தையென்னும் நிச்சயம் தத்துவவிவேகமாம்.

வினா :—ஆத்மா வென்பது யாது?

விடை :—ஸ்தூல சூக்ஷ்ம காரண சரீரங் களுக்கு வேறாய், பஞ்சகோசங்களுக்கு அப் பாற்பட்டதாய், மூன்றவஸ்தைகளுக்குஞ் சாட் சியாய், சச்சிதாநந்த சொரூபமாய் இருப்பமெது வோ, அது ஆத்மாவாம்.

வினா :—ஸ்தூல சரீரமென்பது யாது?

விடை :—பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களா லாகியதும், கருமத்தாற் றோன்றியதும், சுக துக்காதி போகத்திற் கிடனாயதுமாகிய பிறத் தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறைதல், கெடுதல் என்னும் ஆறு விகாரங்களையுமுடைய இச்சரீரம் ஸ்தூல சரீரமாம்.

வினா :—சூக்ஷ்ம சரீரமென்பது யாது?

விடை :—அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்க ளாலாகியதும், கருமத்தாற் றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற்குச் சாதனமாகியது மாய் ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, பிராணாதி ஐந்து, மனம் ஒன்று, புத்தி ஒன்று ஆகிய இப்பதினேழு கலைகளோடு கூடி யிருப்பதெதுவோ, அது சூக்ஷ்ம சரீரமாம்.

வினா :—ஞானேந்திரியங்க ளெவை?

விடை :—சுரோத்திரம் (காது), துவக்கு (தோல்), சக்ஷு (கண்), * இரசனை (நா), கிராணம் (மூக்கு) என்னுமைந்தும் ஞானேந் திரியங்களாம்.

வினா :—ஞானேந்திரியங்களின் அதிதேவ தைகள் எவை?

விடை :—சுரோத்திரத்திற்குத் திக்கும், துவக்கிற்கு வாயுவும், சக்ஷுவிற்குச் சூரியனும், இரசனைக்கு வருணனும், கிராணத்திற்கு அசு வனி குமாரரிருவரும் தேவதைகளாம்.

வினா :—ஞானேந்திரியங்களின் விஷயங்கள் எவை?

விடை :—சுரோத்திரத்திற்குச் சத்தத்தைக் கவர்தலும், துவக்கிற்குப் பரிசத்தைக் கவர்த லும், சக்ஷுவிற்கு உருவத்தைக் கவர்தலும், இரசனைக்கு இரசத்தைக்கவர்தலும், கிராணத் திற்குக் கந்தத்தைக்கவர்தலும் விஷயங்களாம்.

வினா :—கன்மேந்திரியங்கள் எவை?

விடை :—வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்னு மைந்துங் கன்மேந்திரியங்க ளாம்.

வினா :—கன்மேந்திரியங்களின் அதிதேவ தைகள் எவை?

விடை :—வாக்கிற்கு அக்கினியும், பாணி க்கு (கைகளுக்கு) இந்திரனும், பாதங்களுக்கு விஷ்ணுவும், பாயுவிற்கு இயமனும், உபஸ்தத் திற்குப் பிரஜாபதியும் (பிரமனும்) தேவதைக ளாம்.

வினா :—கன்மேந்திரியங்களின் விஷயங்கள் எவை?

விடை :—வாக்கிற்கு வசனமும், பாணிக் குப் பண்டங்களை யேற்றலும், பாதத்திற்கு நடத்தலும், பாயுவிற்கு மல நீக்கமும், உபஸ் தத்திற்கு ஆநந்தமும் விஷயங்களாம்.

வினா :—காரண சரீரமென்பது யாது?

* இதனையே சிக்குவை யென்றுங் கூறுவர்.

விடை :—*அநிர்வாச்சியமாய் †அநாதியாய் அவித்யா வடிவமாய்ச் சரீரமிரண்டற்குங் காரணமாத்திரமாயிருக்குஞ் சுவசொரூப அஞ்ஞானமாகிய நிருவிகற்பவடிவம் எதுவோ, அது காரணசரீரமாம்.

வினு :—மூன்றவஸ்தைகள் எவை ?

விடை :—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி யென்பவை மூன்றவஸ்தைகளாம்.

வினு :—சாக்கிராவஸ்தை யென்பது யாது ?

விடை :—சுரோத்திர முதலிய ஞானேந்திரியங்களால் சப்தமுதலிய விஷயங்கள் எக்காலத்தி லறியப்படுகின்றனவோ, அது சாக்கிராவஸ்தையாம். (அவஸ்தை-காலம்-சமயம்.)

வினு :—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன் ?

விடை :—இவ்வவஸ்தையின் தூல சரீராபிமானியாகிய ஆத்மா விசுவன் எனப்படுவன்.

வினு :—சொப்பனுவஸ்தை யென்பது யாது ?

விடை :—சாக்கிராவஸ்தையில் பார்க்கப்பட்டவைகளாலும், கேட்கப்பட்டவைகளாலும் உண்டாகிய வாசனையால் நித்திரைக் காலத்தில் எதில் பிரபஞ்சந் தோற்றுகின்றதோ, அது சொப்பனுவஸ்தையாம்.

வினு :—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன் ?

விடை :—இவ்வவஸ்தையின் சூக்ஷுமசரீராபிமானியாகிய ஆத்மா தைஜஸன் எனப்படுவன்.

வினு :—சுழுத்தியவஸ்தை யென்பது யாது?

விடை :—'யான் ஒன்று மறியேன், நித்திரையென்னுற் சுகமா யநுபவிக்கப் படுகின்றது' என்னும் நினைவிற்கு ஏதுவாய அநுபவகாலம் சுழுத்தியவஸ்தையாம்.

வினு :—இவ்வவஸ்தையின் அபிமானி யாவன் ?

விடை :—இவ்வவஸ்தையின் காரண சரீராபிமானியாகிய ஆத்மா பிராஞ்ஞன் எனப்படுவன்.

வினு :—பஞ்சகோசங்கள் எவை ?

விடை :—அன்னமயம், பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயம், ஆனந்தமயம் என்பனவாம்.

வினு :—அன்னமயகோசம் என்பது யாது?

விடை :—அன்ன ரசத்திலே யுண்டாய், அன்ன ரசத்தினலே விருத்தியடைந்து, அன்னரூபப் பிருதிவியில் எது ஒடுங்குகின்றதோ, அது அன்னமயகோசமாம். அதுவே தூல சரீரமாம்.

வினு :—பிராணமயகோசம் என்பது யாது?

விடை :—*பிராணுதியைந்து வாயுக்களும் வாக்காதி ஐந்து கன்மேந்திரியங்களும் பிராணமயகோசமாம்.

வினு : மனோமயகோசம் என்பது யாது ?

விடை :—மனதும், ஞானேந்திரிய மைந்துஞ் சேர்ந்து ஆவது எதுவோ, அது மனோமயகோசமாம்.

---

* மெய்யென்றும் பொய்யென்றுஞ் சொல்லத்தகாதது எதுவோ அது அநிர்வாச்சியமாம். மாயையைப் பொய் யென்போமாயின் பிரபஞ்சோற்பத்தி கூடாது; மாயையோ பிரபஞ்சத்தை உண்டுபண்ணுகின்றது; சத்தியமென்போமாயின் ஞானத்தாற் கெடுகின்றது; ஆகவின் மாயை அநிர்வாச்சியமாம். அங்ஙனமே பழுதையிற் றோன்றிய பாம்பு பொய்யென்போமாயின் உண்டாகின்ற அச்சம், நடுக்க முதலியன உண்டாகலாகா. சத்தியமெனின் விசாரத்தாற் கெடுகின்றது. ஆதலாற் பழுதையிற் பாம்பு அநிர்வாச்சியமாம். அநிர்வாச்சியம் = இஃது இன்னதென் றுறுதியாய்ச் சொல்லத்தகாதது அநிர்வசநீயம் என்பதும் அதுவே.

† உற்பத்தி யில்லாததாய்.

* பிராணுதி யைந்து வாயுக்களாவன :—பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்பனவாம். அவற்றுள், பிராணன் இதயத்திலிருந்து உசுவாச நிசுவாசங்களைச் செய்யும்; அபானன் குதத்திலிருந்துகொண்டு மலசலங்களை வெளிப்படுத்தும்; சமானன் உந்தியிலிருந்துகொண்டு உண்ட அன்னரசங்களை நாடியின் வழியாய்ச் சரீரமுழுவதினும் செலுத்தும்; உதானன் உண்பனவும் பருகுவனவுமாகிய அன்னரசங்களைப் பிரிக்கும்; வியானன் உடல் முழுவதினு மிருந்து உடலின் மூட்டுகளைத் திருப்பும்.

வினு:—விஞ்ஞானமயகோசம் என்பது யாது?

விடை:—புத்தியும் ஞானேந்திரியமைக்தும் சேர்ந்து ஆவது எதுவோ, அது விஞ்ஞானமயகோசமாம்.

வினு:—ஆனந்தமயகோசம் என்பது யாது?

விடை:—காரண சரீர வடிவினதாகிய அவித்தையின்கணுள்ள * மலின சத்துவமான † பிரியாதி விருத்திகளோடு கூடியது ஆனந்தமயகோசமாம்.

இப்பஞ்ச கோசங்கள் என்சரீரம், என்பிராணன், என்மனம், என்புத்தி, என்ஞானம் என்று தன்னாலேயே உணரப்படுகின்றன. எப்படி எனதென்னுந் தன்மையாய் அறியப்பட்ட கனகம், குண்டலம், வீடு முதலியன தன்னினும் வேறாகின்றனவோ, அதுபோலப் பஞ்சகோச முதலியனவும் எனதென்னுந் தன்மையால் அறிடப் படுகின்றன வாதலால் ஆன்மாவாகா.

(இன்னும்வரும்.)

---

SHORT STORY.

## டாக்டர் கங்காராம்.

---

இது மிகவும் பரிதாபகரமான விபத்து. ஆனால் இம்மீதிரி சம்பவித்ததிற்கு யார்மேல் குற்றம் சொல்லமுடியும். உண்மையாய் நடந்த சங்கதி இரண்டு பேர்களுக்குத்தான் தெரியும். அவர்கள் இருவரும் எவ்வளவு வருத்தப்பட்டிருப்பார்கள் என்று நாம் ஊகிக்கமுடியுமேயல்லது, சரியாய் அறிய முடியாது. நடந்த சங்கதி பின் வருமாறு. அதை யறிந்த பிறகு யார் யார் எவ்வளவுதூரம் குற்றவாளிகள் என்று நம் பூர்ணமில்லா அறிவால் தீர்மானிக்கமுடியுமா என்று பார்ப்போம்.

காலஞ்சென்ற காசிநாத் என்பவர், வெளியூர்களில் மிசப் பிரசித்திபெற்றவ ரல்லவென்றாலும், தன் உள்ளூராகிய புனவில் யாவராலும் நன்குமதிக்கப்பட்டவர். எந்தவழியினாலும்சரி, லாபமே பிரதானபலனான வியாபாரத்தில் கூட அதிக பேராசையால் மற்றவர்களை மோசஞ்செய்யாமலும், மற்றவர்கள் விஷயத்தைத் தான் கவனிக்காவிட்டால் உலகமே அசைவற்று நின்றுவிடும் என்று சிலர் முக்கியமாய் பிறர் ரகஸியங்களை அறியமுயலுவதுபோல் இல்லாமல் தன் கார்யத்தையே கவனித்தும், தான் சொன்ன சொல்லை, இப்போது அணிந்து கொஞ்சநேரத்தில் கழற்றி எறியக்கூடிய உடைபோல் எண்ணாமல் எப்போதும் தவறாமல் நிறைவேற்றியும், இன்னும் இதுபோன்ற அநேக விஷயங்களில் தன்பெயர் கெட்டுப்போகக் கூடாதென்று, சரியாய் நடந்துவந்தபடியால் அவரிடத்தில் ஊராரெல்லாருக்கும் நிரம்ப மரியாதையும் நம்பிக்கையும் உண்டு. இவருக்கு இரண்டு குழந்தைகள் உண்டு. ஒரு ஆணும் ஒரு பெண்ணும். மூத்த குமாரன் விசுவநாத் என்பவனுக்கு 15 வயது. இரண்டாவது குமாரத்தி கமலாபாய் என்பவளுக்கு 11 வயது. இந்த சமயத்தில் காசிநாத் என்பவருக்கு உடம்பு சௌக்கியம் தப்ப, சமயத்தில் வைத்தியர்களின் சிகித்ஸையில்லாமல், தன்னிரு குழந்தைகளையும், தன் பத்நியான பிரேமாபாயையும் விட்டு விதிவசத்தால் தேகவியோகமடைந்தார். தன் பையன், விசாரமற்று கையைக்கட்டி உட்கார்ந்து சாப்பிடும்படி அவ்வளவு ஆஸ்தி வைத்துவிட்டுப் போகவில்லை.

நம் கதை இதற்கு மூன்று வருஷங்களுக்குப் பின்னால் நடந்த சங்கதிகளைக் குறிக்கிறது. விசுவநாத்துக்கு 18 வயது. இவன் துர்ப்பாக்கியத்தால், இவனைக்கண்டித்து சரியானவழியில் கொண்டுவரவேண்டிய நாளில் தகப்பனார் போய்விட்டார். குடும்பத்தில் ஒரே பையனாதால் தாயாரிடத்தில் வெகு செல்வாக்காய் வளர்ந்துவந்தவன். ஆகையால் அவன் மேல் இருந்த பிரியத்தால் உசித சமயங்களில் கடிந்துபேச தாயாருக்கு மனம் வரவில்லை. அப்படி பேசியிருந்தபோதிலும் பிரயோஜனப்பட்டிருக்காது. ஊரில் இருந்த அநேகம்

பெரிய மனிதர்கள், இவன் தகப்பனுரிடத்தி லிருந்த பிரியத்தை யுத்தேசித்து எப்போதா வது இவனுக்கு நல்லபுத்தி சொல்வார்கள். இவன் அந்த வார்த்தைகளை காதுகொடுத்துக் கேட்கிறதில்லை. அடிக்கடி சொல்ல வாரம் பித்தால் அவர்களிடம் போகிறதில்லை.

இப்படி, இவன் விஷயத்தில் வாஸ்தவமானு அக்கறை யிருந்திருக்கக்கூடிய தகப்பனுர் இல்லாததால், இவன் வரவர "கைம்பெண் டாட்டிமகன்" ஆனுன். கொஞ்சங் கொஞ்ச மாக துஷ்டர்களின் சகவாஸம் பிடிபட்டது. வீட்டில் அதிகநேரம் நிற்பதில்லை. வீட்டில் இருக்கும்போதெல்லாம், தன் தாயின் பரிதாப மான பார்வையைக் காணும்போதெல்லாம் பழைய ஞாபகம் வந்தபடியால் தாய்மேலும், தன்மேலும், கோபங்கொண்டு சரேலென்று வெளியில் போய்விடுவான். இப்படி இவன் கெட்டுப்போவதைப் பற்றி, ஊரார் தங்க ளுக்கு வேலை ஒழிந்து வயிறுநிறைந்த சமயங் களில் கொஞ்சம் பரிதாபத்துடன் நினைப்ப துண்டு. அதைவிட அதிகமாகத்தான் அவர் கள் என்னசெய்யமுடியும்.

இந்த சந்தர்ப்பத்தில் டாக்டர் கங்காராம் என்பவர் புனுவுக்கு 'அஸிஸ்டண்டு ஸர்ஜன்' அதாவது ஜில்லாவுக்கு இரண்டாவது வைத் தியராக வந்துசேர்ந்தார். வயது 22 தான் என்றாலும் வைத்தியசாஸ்திரத்தில் உயர்ந்த பரிக்ஷைகளில் தேறினதால் முதலிலேயே உயர்ந்த உத்யோகம் கிடைத்தது. பிரதான வைத்தியனுன ஐரோப்பியன் வெள்ளைக்காரர் தவிர மற்றவர்களுக்கு வைத்தியம் செய்வது தன் மரியாதைக்குக் குறைவு என்று நினைத்த வனுகையால் "கறுப்பு மனுஷர்" எல்லாருக் கும் கங்காராம்தான் வைத்தியம் செய்வது. பொறுமையாய்ப் புன்சிரிப்புடனே வியாதி யஸ்தர்களின் குறைகளைக் கேட்டு, குறிக ளால் வியாதியை சரியாய் நிர்த்தாரணம் செய்து, நல்லமருந்துகளால் சொஸ்தம்பண்ணு வதில் இவருக்குச்சமானம் ஒருவரும் இல்லை. தன் லாபத்தை அதிகமாக உத்தேசிக்காத கெட்டிக்கார வைத்தியனைப்போல் பரோப காரியாருண்டு? எல்லாரும் இவரை யுபகாரி யென்றே நினைத்து "வக்கீலிடத்திலும் வைத் தியனிடத்திலும் வந்து மடங்காத ரஹஸியம் எது" என்பதிற்கியைய, தங்கள் ரஹஸியம் எல்லாம் இவரிடம் ஒப்புவித்து வந்தார்கள்.

ஒருதரம் கங்காராம், வைத்தியவிஷயமாகப் பிரேமாபாயிடம்போக நேரிட்டது. அதுமுதல் அவர், முன்னால் அந்தக்குடும்ப விஷயமாய் சமாசாரங்கள் மற்றவர்சொல்லக் கேட்டிருந்த தாலும், ஒருகாலத்தில் நல்ல ஸ்திதியிலிருந்து இப்போது கஷ்டதசையை யடைந்தவர்கள் என்று காட்டும் அவர்கள் கௌரவ நடத்தை யைத் தான் நேரில் கண்டதாலும், பிரேமா பாய் முதலானவர்களின் விஷயத்தில் கொஞ் சம் சிரத்தையுள்ளவராய், அடிக்கடி அவர்க ளிடம் போக்குவரத்துள்ளவரானுர். இதைத் தவிர இன்னும் ஒருகாரணமும் உண்டு. பதின் மூன்று வயதுள்ள கமலாபாயைக் கண்டது முதல், இவர் மனதில் தன் கல்யாணவிஷய மாக யோசிக்கவாரம்பித்தார். சிறுவயதில், ரக்தபுஷ்டியால் இயற்கையாய் ஏற்படும் சுறு சுறுப்பும், தாயார்படும் துக்கத்தைக் காண்ப தால் கொஞ்சவிசனமும் கலந்த கமலாபாயின் முகம், உபாத்தியாயர் அடிக்கு பயந்து சிரமத் துடன் சிரிப்பையடக்கும் சிறுவன் முகம் போலிருந்தது. இவள் உயர்பிறப்பையும், தாய் தமையனிடமிருக்கும் பிரியத்தையும் கண்டு சந்தோஷித்து. தன்னிஷ்டத்தைப்பிரே மாபாயிடம் வெளியிட்டார். அவளும், தன் அநாதையான ஸ்திதியையும், எப்படி யிருந்த போதிலும் தன் பெண்ணுக்கு ஒரு புருஷனைத் தேடத்தானே வேண்டும் என்பதையும் யோசித்து சம்மதித்தாள். ஊராருக்கு இந்த விஷயம் தெரியவே, கங்காராம்செய்தது நல் லது என்று மெச்சினுர்கள். இரண்டு மாதங் களுக்குப் பிறகு கல்யாணம்செய்வதாய்த் தீர் மானிக்கப்பட்டது.

விசுவநாதை நாம் மறந்துபோகவில்லை. சாப்பிடும் வேளைதவிர வீட்டிலிருப்பதில்லை என்று வழக்கம் ஏற்பட்டுவிட்டது. வீட்டுக்கு வந்தபோதும், சமீபத்தில் குடித்துவிட்டு வந்தானோவென்று சந்தேகிக்க இடம் இருந்தது. கங்காராம் அவன் வீட்டிற்கு அடிக்கடி போவதுண்டு என்றாலும் எப்போதாவது தான் இவனை அகஸ்மாத்தாய்க் காண்பது. அதைத் தவிர, கமலாபாயைத் தேடிப்போவதால் விசுவநாத் வீட்டில் இல்லையென்பதே இவர் மனதில் படுவதில்லை.

இப்படி இருக்கையில் ஒருநாள் டாக்டர் பட்டணத்துக்குவெளியில் கொஞ்சதூரத்தில் ஒரு பங்களாவிலிருக்கும் ஒரு நோயாளியைப் பார்த்துவிட்டு, வீட்டுக்குத்திரும்பி நடந்து வந்தார். சாயங்காலம் சுமார் 8 மணியிருக்கலாம். நக்ஷத்திர வெளிச்சமும், வலைபோட்டுத்தேடவேண்டிய முனிசிபல் விளக்குகளின் வெளிச்சமும் சேர்ந்து அதிக தூரத்திலில்லாத வஸ்துக்களையெல்லாம் நன்றாகப் பார்க்கப் போதுமானதாயிருந்தது. இப்படி யிவர் போய்க்கொண்டிருக்கையில், ரஸ்தாவுக்குச் சமீபத்தில் இரண்டுபெயர் வெகு உக்கிரமாய்ச் சண்டைபிடித்துக்கொண்டிருந்தார்கள். அதில் ஒருவன், இவர், சமீபத்தில் வரும்போது, கோபாவேசனாய், தன்னிடுப்பிலிருந்த ஒரு கத்தியை யெடுத்து மற்றவனைக் குத்திவிட அவன் செத்துக் கீழே விழுந்தான். கோபவெறியில் இன்னதென்று தெரியாமல் செய்துவிட, மற்றவன் இப்போது திரும்பி ஓட வாரம்பித்தான். அவன் திரும்பினசமயத்தில், பக்கத்திலிருந்த விளக்கின் வெளிச்சத்தில் அவன் முகத்தைப்பார்த்த கங்காராம் திகைத்து நின்றார்—அவர் பார்த்தது விசுவநாதின் முகம், கொஞ்ச நேரத்தில் நிதானித்துக்கொண்டு, வேண்டிய அவசர சமயத்தில் அகப்படா அருமருந்தான போலீஸ்சேவகனைக் கண்டுபிடித்து, அவனிடம் கொலைநடந்த சமாசாரத்தைச் சொல்லி, வீட்டிற்குப்போய், தான் என்ன செய்வது என்று தெரியாமல் மனங்கலங்கியிருந்தார்.

மறுநாள் காலை 10 மணிக்கு பிரேமாபாய் வீட்டிற்கு இவர்போய் எப்போதும்போல் பேசிக்கொண்டிருந்தார். பிரேமாபாயும், முதல் நாளிரவு, 9 மணிக்கு விசுவநாத் அலங்கோலமாய் வீட்டிற்கு ஓடிவந்து அதுவரையில் தன்னறையைவிட்டு வெளியேவராமல் இருப்பதைப்பற்றி ஏதோ நடந்திருக்கவேண்டுமென்று விசாரப்பட்டுக்கொண்டிருந்தாள். இந்த சமயத்தில், யாரோ வாசல் கதவைத் தட்ட, கதவு திறக்கப்பட்டு, அந்தவூர் போலீஸ் இன்ஸ்பெக்டர் உள்ளே வந்தான். அவனைக் கண்டதும் பிரேமாபாய், யமதூதனைக்கண்டவள் போல் நடுங்கி, "ஐயோ என் பையனைக்கூட்டிக்கொண்டு போகத்தான் வந்திருக்கிறாய். அவன் என்ன குற்றம் செய்தான் சொல்லு" என்றாள். இன்ஸ்பெக்டர் அசட்டுச்சிரிப்புடன் "ஒன்றும் இல்லை. இரண்டு சிறிய கேள்விகளுக்குப் பதில் சொல்லிவிட்டு சீக்கிரம் வந்துவிடுவான். அவனை நாங்கள் ஒன்றும் செய்யவில்லை" என்று தைரியம் கூறி, விசுவநாதைக் கூப்பிடும்படி சொன்னான். அந்த துர்ப்பாக்கியனும் தான் தப்பமுடியாதென்று கண்டு, பயம் என்பதே மூர்த்திகரித்து பிரத்தியக்ஷமானாற்போல வந்து "நான் ஒன்றும் செய்யவில்லை. நேற்று ராத்திரி 8 மணி முதல், நான் வீட்டிலேயே இருக்கிறேன் என் தாயாருக்குக்கூடத் தெரியும்" என்றான். இன்ஸ்பெக்டர் சிரித்துக்கொண்டு "அதிருக்கட்டும் நேற்றிராத்திரி 8 மணிக்கு எங்கேயிருந்தாய் என்று நான் கேட்கவில்லையே. இப்போது நீ என்னசொன்னாலும், அதெல்லாம் பின்னால் விசாரணைசமயத்தில் உனக்கே விரோதமாய் முடியும். ஆகையால் வாயைத்திறவாமல் என்னுடன்வா" என்று தன்னுடன் கூட்டிக்கொண்டு போய்விட்டான்.

பிரேமாபாயும் கமலாபாயும் அழவாரம்பித்தார்கள். கங்காராமோ, தனக்குத் தைரிய

மிருந்தாலல்லவா மற்றவர்களுக்குத் தைரியம் சொல்லலாம். ஆகையால் ஒருதரம் "ஒன்றும் பயமில்லை ஏன் அழுகிறீர்கள்" என்பார். இன்னொருதரம் "எல்லாம் ஈசன் செயல்" என்பார். இப்படி சம்பந்தமில்லாமல் தாறுமாறாய் உளறிவிட்டு, தான் நேரில்போய் குற்றம் இன்னதென்று அறிந்துவருவதாய் சாக்குச்சொல்லிவிட்டு, இவர்கள் துக்கத்தைப் பார்க்கச் சகியாதவராய் வீடுபோய்ச்சேர்ந்தார்.

கூலியில்லாமல் வேலைசெய்யும் கலகக்கார மஹான்களில் ஒருவர் மறுநாள் காலையில் பிரேமாபாயிடம் வந்து, அவள் மகன்மேல் அநியாயமாய்க் கொலைக்குற்றம் சாட்டியிருப்பதாகவும், அதை ஊரார் ஒருவரும் நம்பவில்லையென்றும், பிரேமாபாயைப் போன்றவருக்கு ஈசுவரன் தீங்குவிளைவிக்கமாட்டார் என்றும், இன்னும் இதுபோன்ற செலவில்லாத உபசார வார்த்தைகள் சொல்லி அனலில் புழுப்போல், துக்கத்தில் துடிக்கிற பிரேமாபாயை கண்டு களித்து வீட்டிற்குப்போனார்.

விசாரணையாக இன்னும் 3 நாள் இருந்தது. இதற்கிடையே தான் தைரியம் சொல்ல முடியாவிட்டாலும், எல்லாராலும் கைவிடப்படவில்லையென்று மனத்தேர்ச்சியாவது அவர்களுக்கு உண்டாகட்டும் என்று கங்காராம், பிரேமாபாய் வீட்டிற்குப் போய்வந்தார். எவ்வளவு வேதாந்தம் பேசினாலும், எவ்வளவு பெரிய துக்கம் நேரிட்டாலும் ஆகாரத்தைத் தள்ளமுடியாதாகையால், விசனத்தில் சரியான வேளைகளில் ஆகாரம் உட்கொள்ளாமல் நிஷ்பிரயோஜனமாய் உடம்பைக் கெடுத்துக் கொள்ளாமலிருக்கும்படி தானே நேரிலிருந்து அப்போதப்போது அவர்களைச் சாப்பிடச் செய்துவந்தார்.

விசாரணை நாள் வந்தது. தீர்மானம் எவ்வாறு முடியும் என்று தெரிந்தபோதிலும் தாங்கள் செய்யவேண்டிய பிரயத்தினத்தில் குறையிருக்கக்கூடாதென்று வக்கீல் ஏற்படுத்தினார்கள். வக்கீலும் தான் வாங்கின பணம் ஜெரிக்கவேண்டுமே என்று மனப்பூர்த்தியாய் சிரமப்பட்டு குற்றவாளியைப்பற்றி சொல்லக் கூடிய அநுகூலமான நல்லகுணங்கள் யாவற்றையும் எடுத்துக்காட்டினார். எவ்வளவு சொன்னாலும் குற்றவாளிக்கு விரோதமாய் மூன்று விஷயங்களிருந்தன. முதலாவது கொலை நடந்த சாயந்திரம் கொல்லப்பட்டவனுக்கும் குற்றவாளிக்கும் பெரிய சண்டை நடந்ததாகவும் அப்போது குற்றவாளி பயமுறுத்தி வார்த்தை சொன்னதாகவும், இரண்டாவது கொல்லப்பட்டவன் உடம்பிலிருந்து எடுத்த கத்தி குற்றவாளியுடையது என்றும் மாற்ற முடியாத ருஜு ஏற்பட்டது. மூன்றாவது கங்காராம் தான் நேரில் கொலை நடந்த சமயத்தில் கண்டதாகவும், கொலைசெய்தது விசுவநாத்தான் என்றும் சாக்ஷிசொல்லநேரிட்டது. இந்த மூன்று காரணங்களைக்கொண்டும் இன்னும் ஏழுநாளில் விசுவநாத் தூக்கிலிடப்படவேண்டியது என்று தீர்மானஞ் செய்யப்பட்டது.

இது தெரிந்தவுடன், புனவிலிருக்கும் பெரிய மனிதர்களெல்லாரும் ஒன்று சேர்ந்து, தண்டனைவிதிக்கப்பெற்ற விசுவநாத் மரியாதைபெற்ற குடும்பத்தைச் சேர்ந்தவனென்றும் கெட்டசகவாசத்தினால் இப்பரிதாபமான நிலைமைக்குவந்தவன் என்றும், இக்கொலை செய்வதில் அவனுக்கு லாபம் ஒன்றுமில்லாததால் கோபவெறியில் செய்துவிட்டானென்றும் அதினால் மரணதண்டனையை தயவுடன் மாற்றி வேறுவிதத் தண்டனை விதிக்கவேண்டுமென்றும் தணடனை நிறைவேற ஒருவாரம்தானிருப்பதால் பதில் கூடிய சீக்கிரம் எழுதவேண்டுமென்றும் எல்லாரும் கையெழுத்துப்போட்டு சர்க்காருக்கு ஒரு மனு எழுதிக்கொண்டார்கள்.

இது இப்படி நிற்க, ஜெயிலில் இருந்த விசுவநாதுக்கும் பிரேமாபாயிக்கும் சமாசாரப் போக்குவரவு கங்காராம் மூலமாக நடந்தது. இவர், ஐரோப்பிய வைத்தியனுக்குப் பதிலாய் ஜெயில் கைதிகளின் சௌக்கியத்தைப் பாதுகாப்பதற்காக தினம் 3 தடவை போவதுண்டு.

இப்போது விசுவநாத் ஜெயிலிலிருப்பதால் தனக்கு ஒழிந்தவேளைகளில் அவனை அடிக் கடிபோய்ப் பார்த்துவந்தார். ஒருபக்கத்தில் அவனுக்குத் தைரியம் சொல்லவும், அதற்குப் பிறகு அவனிடமிருந்து சில பிரியமான வார்த் தைகளை பிரேமாபாயிக்குக் கொண்டுபோய் அவர்கள் விசனத்தையாற்றவும் தான் இவருக் குப்பொழுது சரியாயிருந்தது. சர்க்காரிட மிருந்து மன்னிப்புப்பத்திரம் இன்று வரும், நாளை வரும் என்று எல்லாரும் எதிர்பார்த்தி ருந்தார்கள். முக்கியமாய் கங்காராம் அதே நினைவாக சரியாய் தூங்குகிறதுகூட இல்லை. அவர் இவ்வளவு விசாரப்பட முக்கியமாய் ஒரு காரணம் உண்டு. தூக்கிலிடப்பட்ட கொலைகாரனின் தங்கையை கல்யாணம் செய்துகொண்டதாக தனக்கு அபக்கியாதி வருமே என்ற விசாரம் மேலிட்டது.

இப்படியாக ஆறுநாள் ஆய்விட்டது. சர்க் காரிலிருந்து பதில் வரவில்லை. ஏழாவது நாள் ராத்திரி இராமுழுவதும் தான் விசுவநா திடம் இருக்கப்போவதாய் பிரேமாபாயிடம் சொல்லிவிட்டு ஜெயிலுக்குப்போனார். அங்கே விசுவநாத் ஜ்வரம் கண்டதுபோல் தபித்துக் கொண்டிருந்தான் "ஐயோ என்னை ஒரேதா மாய் கொன்றுவிட்டாலும் நல்லது. இப்படிக் காக்கவைப்பதில் ஒரு நிமிஷம் ஒருயுகமாய்த் தோன்றுகிறது. என் தாயாருக்குதவாமல் நான் போய்விட்டேன். என்னுடைய பழைய கெட்டவழிகளெல்லாம் இப்போதுதான் தெரி கிறது. இனிமேல் அதுமாதிரி நடக்கமாட் டேன், ஆனால், என் நடத்தையை சீர்திருத்தி சரியானவழியில் நடக்க என்னைக்கொல்லா மல் விட்டாலல்லவா வல்லது" என்று பலவித மாய் துக்கித்துக்கொண்டிருந்தான். கங்கா ராம் வந்தவுடனே, தன் துக்கங்களை மறந்து விட்டு தன் தாயார் தங்கை இவர்கள் என்ன மாகவிருக்கிறார்கள் என்று கவலையுடன் விசா ரித்து, மறுநாள் காலை 7 மணிக்குத் தன்னை தூக்கிடப்போகிறவரையில் தன்னிடத்திலி ருந்து பிறகு தன் தாயிடம்போய், அவள் வார்த்தையைக் கேட்காததால் இந்தஸ்திதிக் குத்தான்வந்து அவளுடைய வயது காலத் தில் அவளுக்கு துக்கத்தை உண்டாக்கினதற் காக தான் மன்னிப்புக் கேட்டுக்கொண்டதா கத் தாயிடம் சொல்லவும் கங்காராமை வேண் டிக்கொண்டான். இவ்வாறு இரவும் கழிந் தது. காலை ஆறு மணிக்கு காவல்காரர்கள் கைதியைக் கொலைக்களத்துக்குக் கூட்டிக் கொண்டுபோக வந்தார்கள். கைதியின் அறை யின் சமீபத்தில் வந்ததும், அறைக்குள் "ஐயோ" என்ற சத்தங்கேட்டு உள்ளே போய்ப்பார்க்க, கங்காராம் தன்மடியின்மீது விசுவநாத்தின் தலையை வைத்துக்கொண்டு, சுவாசம் இருக்கிறதா என்று பார்த்துக்கொண் டிருக்கக் கண்டார்கள். பக்கத்திற்போய் உடம்பின்மேல் கையைவைத்துப் பார்க்க விசு வநாத் செத்துப்போய்விட்டதாக அறிந்தார் கள். கங்காராம் அவர்களைப்பார்த்து "இனி மேல் நாம் என்னசெய்வது துக்கத்தால் மனம் உடைந்து இறந்துபோய்விட்டான் உங்களை விட பெரிய அதிகாரி தண்டனை விதித்துவிட் டார்" என்றுசொல்லி புறப்பட்டார். அதே சமயத்தில் வெளியே ஒரு ஆரவாரம் உண்டா யிற்று. இவர் ஜெயிலைவிட்டு வெளியேறுமுன், ஒரு சேவகன் வியர்த்துப் பெருமூச்சுவிட்டும் குதிரையினின்று இறங்கி "விசுவநாத்தின் மன்னிப்புப் பத்திரத்தை இதோ கொண்டு வந்தேன்" என்று சொல்லிக்கொண்டே உள்ளே வந்தான். இதைக்கேட்டதும் கங்கா ராம் ஒன்றும் தோன்றாதவராய் கண்கள் சிவந்து குடிவெறியன்போல் தள்ளாடிக் கொண்டு வெளியே புறப்பட்டார். "ஐயோ பாவம் விசுவநாத் செத்தபிறகு இந்த மன்னிப் புப்பத்திரம் வந்ததே என்று டாக்டருக்கு நிரம்ப வருத்தம். அதையும் தவிர நேற்றி ராத்திரி தூங்கவேயில்லை. அதனால் இவர் பைத்தியம் பிடித்தவர்போல இருக்கிறார்" என்று எல்லாரும் பரிதாபத்துடன் சொல்லி, அவருக்கு வழிவிட மரியாதையாய் ஒருபக் கம் ஒதுங்கி நின்றார்கள். கங்காராமோ, அதே

மாதிரி தள்ளாடிக்கொண்டே தன் வீட்டிற்குப்போய், அவசரமாய் பிரயாணம் புறப்பட வேண்டியவர்போல் கையில் கொஞ்சம்பணம் இரண்டு உடுப்புகள் இவற்றை யெடுத்துக்கொண்டு பிரேமாபாய் வீட்டிற்கு வந்தார். வந்ததும் கமலாபாயைத் தான் தனியாய் இரண்டு நிமிஷத்துக்குப் பார்க்கவேணுமாம் என்று வேலைக்காரிமூலமாய் சமாசாரம் சொல்லி யனுப்பினர். கொஞ்சநேரத்துக்கெல்லாம் கமலாபாயும் வந்தாள். அவளும் ராத்திரி முழுதும் தூங்கவில்லையென்று தோன்றிற்று. கெங்காராமைக் கண்டதும் அவர் திருதிரு என்று விழிப்பதைப்பார்த்துக் கொஞ்சம் பயந்து என்ன சமாசாரம் என்று கேட்டாள்.

அதற்கு அவர் வெகுதூரம் ஓடிக்களைத்தவன் மூச்சுத்தாங்காமல் பேசுவதுபோல் திணறிக்கொண்டே "இன்றைக்கு—காலை $6\frac{1}{2}$ மணிக்கு—விசுவநாத்தின்—மன்னிப்புப் பத்திரம்—வந்தது. ஆனால்—6 மணிக்கு அவன் செத்துப்போய்விட்டான்—தூக்கிலிட்டார்கள்—என்று—அவமானமானபெயர்—வரக்கூடாதேயென்று—நான்தான் அவனுக்கு—$5\frac{3}{4}$ மணிக்கு—விஷம்கொடுத்துக் கொன்றுவிட்டேன்—" என்று வெகு ஹீநஸ்வரத்துடன் சொன்னர். இந்த பயங்கரமான ஸமாசாரம் இன்னதென்று கமலாபாய் மனதில் பூர்ணமாய் கிரஹிக்கும்முன், கங்காராம் கதவைத் திறந்துகொண்டு வெளியே போய்விட்டார்.

அதற்குப்பிறகு கங்காராம் என்று ஒருவராவது பெயர் கேட்டதே இல்லை.

என். வி. ராகவன்.

---

## நமதுபார்வைக்குவந்த புத்தகங்கள்.

**I உபாத்தியாயர் தோழன்:**

(முதற்பாகம்) இந்நூல் காஞ்சிபுரம் பச்சையப்பன் ஐஸ்கூல் தலைமைஉபாத்தியாயர் ம-ா-ா-ஸ்ரீ, ஸி. டி. பார்த்தசாரதிமுதலியா ரவர்கள், B. A. L. T., இயற்றியது. இவ்வாசிரியரை உபாத்திமைத்தொழில் வகித்த பலரும்பலவாற்றாலும் நன்கறிவார்கள். இவரோ, சென்னை டீசர்ஸ் காலேஜிலும் பிற கவர்ன்மெண்ட் நார்மல் பாடசாலைகளிலும் நெடுங்காலம் மாணக்கர்களைப்பயிற்றுவித்த அனுபோகத்தை யுடையவர் அன்றியும் பல வருஷங்களில் கவர்ன்மெண்ட் மெத்தட் பரீட்சைகளின் பரிட்சகராயிருந்திருக்கின்றார்கள். இவர் தக்க கல்வி அனுபோக மென்ற இரண்டையுமுடையாராதலின் உபாத்தியாயர்கட்கு வேண்டுவ வேண்டாதவற்றை நன்கறிந்து முன்னவற்றை விளக்கியும் பின்னவற்றை விலக்கியு மிருக்கின்றார் என்பது கூறவும் வேண்டுமோ? இந்நூலை யிவர் மாணக்கர்கட்கும் உபாத்தியாயர்கட்கும் ஒருங்கே பயன்படுமாறு இனிய தமிழ் நடையில் திருத்தமாயும் விளக்கமாயும் எழுதியுள்ளார்கள். ஆயினும் ஆங்கில நூல்களைத்தழுவி எழுதப்பட்டதாதலின் சில ஆங்கிலேய மொழிகளின் மொழிபெயர்ப்புப் பதங்கள் புதியனவாய் எளிதிற்பொருள் விளங்காது கடினமாய்த் தோற்றுகின்றன. அவை பயிலவழங்கும்போது எளியனவாகிவிடுமென்பதிற் கையமின்று. இந்நூலில் ஒழுங்குபாடு, கிரமசிட்சை, போதனை எனு மூன்று பிரிவுகளுள் முன்னையவிரண்டைமட்டும் முடித்து முதற்கண் விரைவுபற்றி முதற்பாகமாக இதனை ஆசிரியர் வெளியிட்டிருக்கின்றனர். இதன் இறுதியில் 1891-ம் வருமுதல் 'மெத்தட்' பரிட்சைக் கடிதங்களிலுள்ள வினக்களும் அவற்றின் விடைக்குறிப்புக்களும் இருக்கின்றன. இவை இவ்வாசிரியர் முகவுரையிற் கூறியபடியே இப்புத்தகத்தில் விஷயங்கள் பூரணமாக விவரிக்கப்பட்டிருக்கின்றன வென்பதை விளக்குவதோடு கற்போர் பரிட்சை வினக்கள் வரும் விதத்தையும், அவற்றிற்கேற்ற விடைகளளிக்கும் விதத்தையும் அறிய ஏற்ற சாதனமாகவுமிருக்கின்றன. அன்றியும் இதனுள் பல படங்களும், ரிஜிஸ்ட்டர்களும், ரிட்டர்ன்களும் இன்னின்னவிதமா யேற்படவேண்டுமென்று உதகரிக்கப்பட்டு விளங்குவது கற்போர்க்கு மிக உபயோகமுள்ளது. இதன் விலை அணா-12. சென்னை வி. ஜே. மாணிக்கவேலு கம்பெனியாரிடம் கிடைக்குமென்று தெரிகின்றது.

**II கல்விவிளக்கம்.**

இதனை ம-ா-ா-ஸ்ரீ, எஸ். வி. கள்ளப்பிரான் பிள்ளை யவர்களும் ம-ா-ா-ஸ்ரீ, கே. அப்பாவுபிள்ளை யவர்களும் ம-ா-ா-ஸ்ரீ வி. பி. சுப்பிரமணியமுதலியாரவர்களும் சேர்ந்தியற்றியிருப்பதாகத் தெரிய

வருகின்றது. இது ஆங்கிலத்தில் ஹெர்பர்ட் ஸ்பென்சர் துரை யியற்றிய நூலின் மொழிபெயர்ப்பாம். அதன் முத லிரண்டத்தியாயம் மட்டும் மொழிபெயர்க்கப்பட்டு விரைவுநோக்கி முதற்பாகமாக வெளியிடப்பட்டிருக்கின்றது. மற்ற இரண்டத்தியாயங்களும் முடிந்தபோது வெளிவருமென்று இதனாக்கியோர் கூறுகின்றார்கள். ஆங்கிலத்தில் ஸ்பென்சரின் நூலைப்படித்து அதனருமை பெருமைகளை யறிந்த எவரும் இம் மொழிபெயர்ப்பினால் தமிழருக்கு உண்டாகக்கூடிய பயனை மறுக்கத் துணியார். இந்நூல் மிகச்சிறப்புடைய தென்பதற்கு வேறு சாட்சியொன்றும்வேண்டா. பலபல தேசத்தாரும் இதனைத்தத்தம் பாஷைகளில் மொழிபெயர்த்துப் போற்றிவருவதே போதியசான்றாம். இம் மொழிபெயர்ப்பை யாக்கியோர் மூலநூலிற் காணப்படும் சாத்திர சங்கேதமொழிகட் கேற்ற தமிழ்ப் பிரதிபதங்கள் கண்டுபிடித்தலினும் விஷயங்களைத் தமிழ்படுத்தலினும் மிகவும் பாடுபட்டுழைத்திருக்கின்றார்கள்.

இந்நூலில் விவகரிக்கப்படும் பலபல ஆங்கிலேயக் கல்விப்பயிற்சி வழக்கங்களும், அபிப்பிராயங்களும், சாத்திரவிஷயங்களும், ஆங்கில நடையையே முழுதும் பின்பற்றி எழுதப்பட்ட இம் மொழிபெயர்ப்பின் வசனநடையும், அவற்றுட் பழக்கமில்லாது முதலில் இதனை எடுத்துவாசிக்குந் தமிழருக்குப் பெரிதும் பயன்படா. ஆயினும் இன்னுஞ் சிலகாலஞ் செல்லின் அவர்கள் ஆங்கிலேயருடைய சாத்திரங்களிலும், வழக்கங்களிலும், எண்ணங்களிலும், அதிகமாகப் பழகி அவர்களுடைய அபிப்பிராயங்களிற் றாமுங்கலந்து கொள்ளக்கூடிய பக்குவம் வரும். அக்காலத்து இந்நூல் மிகவும் பயன்படுமென்றே நாம் நம்புகின்றோம்.

இந்நூலின் முதல் அதிகாரம் "சிறந்த உபயோகமுள்ள அறிவுயாது?" என்ற தலைப்பையுடையது. இதில் நமது தற்காலக் கல்விப்பயிற்சியில் அலங்காரத்தையும் மேற்பகட்டையும் முக்கியமாய்க் கவனிக்கின்றார்களே யன்றி அறிவினால் விளையும் உபயோகத்தைத் தக்கவாறு கவனிக்கிறதில்லை என்று ஆசிரியர் அபிப்பிராயப்படுகின்றார். நமக்கும் பெற்றோருக்கும் உலகத்தாருக்கும் நம்மைப்படைத்த கடவுளுக்குமாக நாம் செலுத்தவேண்டிய கடமைகளையெல்லாம் சரிவரச் செலுத்துவதற்கும் சிற்பசித்திர கீதமுதலிய நற்கலைகளை யறிந்து அவற்றினின்பத்தை யனுபவித்தற்கும், இன்றி யமையாதது சாத்திரப்பயிற்சி யாதலால் சிறந்த உபயோகமுள்ள அறிவு சாத்திர அறிவே என்று ஆசிரியர் மிக விளங்கக்கூறுகின்றார்.

இரண்டாவ ததிகாரமாகிய "அறிவுப்பயிற்சி" என்பதில் இயற்கையாக நமது மனம் குழந்தைப் பருவத்திலிருந்து எவ்வாறு வளருகின்றதோ அதை யனுசரித்தே நமது கல்விப்பயிற்சியு மிருத்தல்வேண்டுமென்றும் விஷயங்களின் தத்துவங்களைப் பிள்ளைகள் தாங்களே யறிந்துகொள்ளக்கூடிய வழிகளை நாம் காட்டிக் கொடுக்கவேண்டுமே யன்றி அத்தத்துவங்களையே புகட்டி மனனஞ் செய்யச்செய்தல் சரியன்றென்றும், அது பிரயோசனமற்றதென்றும், குழந்தைகள் தாங்களே விஷயங்களை யாராய்ந்து முடிவுபெற விடப்படவேண்டுமென்றும், குழந்தைகளின் பயிற்சிமுறை அவர்களுக்கு ஆனந்தமான உள்ளக்கிளர்ச்சியை உண்டுபண்ணக் கூடியதாயிருத்தல் வேண்டுமென்றும், இப்படி யிருப்பின் பிள்ளைகள் தாங்கள் பள்ளிக்கூடங்களிற் றொடங்கிய கல்விப்பயிற்சியாகிய அப்பியாசத்தைச் சுவபோதனையாக ஆயுள் முழுதும் உற்சாகத்தோடுசெய்து அறிவு வளரப் பெறுவார்களென்றும் கூறுகின்றார். இன்னும் இது போன்றவை கல்விப்பயிற்சி முறையில் அனுசரிக்கப்படவேண்டிய பல அமிசங்களை விரித்துக் கூறுகின்றார்.

இம்மொழிபெயர்ப்பினுள் பொருள் விளக்கத்தைக்குறித்து வேண்டிய விடங்களில் அடிக்குறிப்புக்களும் இடப்பட்டிருக்கின்றன. ஆகவே இத்தகைய சிறந்த ஆங்கிலநூலை மொழிபெயர்த்து வெளியிட்டார்க்குத் தமிழ்நாடு மிகவும் கடமைப்பட்டிருக்கின்றது. இதன் விலை ரூபா ஒன்று. இது சென்னைச் சீனிவாச வரதாசாரி கம்பெனி, அ. ப. ஏஜன்ஸி முதலிய இடங்களிற் கிடைக்குமென்று தெரிகின்றது.

III. தனிப்பாசுரத்தொகை:—

இச்சிறுநூலை இதனாசிரியர் "பரிதிமாற்கலைஞன்" என்ற புனைவுப் பெயரோடு வெளியிட்டிருக்கின்றார். இதற்குக் காரணம் உலகத்தார் ஆசிரியர் பெயர் விசேஷணங்களாற் கட்டுண்ணாது இந்நூலின் குணாகுணங்களை உள்ளது உள்ளவாறே மதிப்பிடவேண்டுமென்னும் விருப்பமே என்கின்றார். இங்ஙனம் இவர், நூலின் குணாகுணங்களைப் பகுத்தறியப்புகும் உலகை மதிப்பிட்டது அவ்வளவு சீரிதன்றென்போம். இதுநிற்க. நூலைப்பற்றிச் சிறிது சொல்வோம்.

"உன்னுமாற்றியேன், உணருமாற்றியேன்
பன்னுமாற்றியேன், பாடுமாற்றியேன்
வணங்குமாற்றியேன், வாழ்த்துமாற்றியேன்."
"...... ......கழைச்சாறென்கோ
தீம்பாலென்கோ தெள்ளமுதென்கோ"
"வானம்வறக்கும் தினஞ்சிறக்கும்
ஞானமிறக்கும் மானம்பிறக்கும்
உயிர்களுயங்கும் பயிர்கடியங்கும்."

என்பது போன்ற சில இடங்களில் வெறுஞ்சொற்பொலிவுமட்டும் நோக்கி மொழிகளை யடுக்கிவைத்தல் அத்துணைச் சிறப்புடைத்தன்று.

"உன்போல் யாரோயுலகினில்
மன்பேரருள்புரி வள்ளலாவரோ!"

இந்த இரண்டாவதடி நேரிசை யாசிரியப்பாக்களின் ஈற்றடி வழக்கமாய் முடிவதுபோல ஏகாரத்தில் முடியக்கூடியதாக இருக்க அனுவசியமாக ஓகாரத்தில் முடிந்திருக்கின்றது. இதுபோலவே இன்னுஞ் சில பாசுரங்களு முடிகின்றன. அன்றியும் மேற்குறித்த அடிகளில் வினாப் பொருளைக்குறிக்க ஒரு வினாவுருபே போதியதாயிருக்க மூன்று உருபுகள் பிரயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன. மற்றோரிடத்தில் ஓர் பாசுரத்தில் செய்து, செய்தென, செய்திய, செய்வான் என்ற அருகி வழங்கும்வினை யெச்சவிகுதிகள் பல ஒருங்கே உபயோகப்படுத்தப் பட்டிருக்கின்றன. இதனைக் காட்டியதில் நாம் நம் நண்பராகிய ஆசிரியர்க்குக் கூறவந்தது யாதெனில் சனங்களிற் பெரும்பாலார் தமிழிலக்கிய இலக்கணப்பயிற்சி யதிகமில்லாதவர்களாதற் பற்றி, நாம் எழுவனவற்றில் அரிய பிரயோசனங்களைக் கூடியவரை விலக்குதலே சால்புடைத்தாம் என்பதே. இதனால் நாம் இலக்கணவிதிகட்கு மாறாகப்புரைபட வரையவேண்டு மென்பதாகக் கொள்ளக் கூடாது. இலக்கணம் வழுவாது பலர்க்கும் பொருள்பட எழுதலாமென்பதே எம்கூற்று. இதுவரை இந்நூலில் விருத்தியாக்கக் கூடியனவென்று எமக்குத் தோற்றியவற்றில் சிலவற்றை எடுத்துக் கூறினோம். இனி இதனருமையைப் பாராட்டுவோம். இதனுள் காலதேச வர்த்தமானங்கட்கேற்றவும், மேன்மையும் ஆழமும் பொருட்பொலிவும் உள்ள பல புதிய கருத்துக்களும் மலிந்திருக்கின்றன. உதாரணமாகச் சிலவற்றைக் காட்டிகிறுத்துவோம்.

"சந்திரனை இரவிபாலொளிபெற்றிர வொளிசெய்வோய்" என்றதும், நிலத்தின் சூழற்சியால் இரவும் பகலும் உண்டாகின்றனவென்னும் கருத்தை,

"ஞாயிறு நோக்கியெஞ்ஞான்று நீயருளும்
பாயிருளிரவும் பகலும் செய்து"

என்ற அடிகளில் அமைத்ததும்,

"நும்மை யடிமைநுகத்துட்படுக்கும்
செம்மையிலீரீயர் செல்ககடிதோ;
ஒத்த உரிமைகள் சித்தம்மகிழ்தர
மைந்தரோ டெய்தினிர் வாழிய."

என்ற அடிகளில் மகளிர்க்கும் ஆண்பிள்ளைகளோடொத்த உரிமைகள் தருதலைப் புகழ்ந்ததும்,

"விடலுறீ இமெலிக்த வீணர்போலாதே"
"துறவே சிறந்ததென்றறவே மதிமருண்
டையகோ மிகவுமரும்பெறல்யாக்கையை
நொய்யதா நினைத்துள நொந்து
வறிதேகெடுத்து வெறியாட்டயர்வலோ!"

என்பனபோன்ற அடிகளிற்றுறவினைப்பழித்துக்கூறியதும் இந்நாட்டகுதிக்கேற்ற எண்ணப்போக்கை விளக்கியனவென்போம்.

துயிலைச்
"செய்யவள் தவ்வையாச் செப்புநர்கருத்தென்?
செய்யவள்தன்னினுஞ் சிறந்தனை என்பதே."

என்ற அடிகளில், துயிலை மூதேவியின் குறியாகக் கொண்டுலகோர் இகழ்வாராகவும், துயில் உடற்குச் சுகங்கொடுத்தலால் பொருளிலும் சிறந்ததென்று கொண்டு மூத்தாள்" என்பதற்குச் சிறந்தாள் எனப் பொருள் கூறி இகழ்ச்சியைப் புகழ்ச்சியாக மாற்றியதும், கண்ணுக்கணிகலங் கண்ணோட்டம் என்று முன்னோர் மொழிந்ததனோ டொப்ப "வாயினுக் கணிகலம் வாய்மை" என்று கூறியதும் இவை போன்றபிறவும் மிகச் சாதுரியமாக அமைக்கப் பட்டிருக்கின்றன.

இராக்காலத்தைப்பற்றிக் கூறும்போது "ஏழையேம்போலியரின்பமுற்றனர்" என்று கூறியதுபோன்றவை சந்தர்ப்பத்திற்கு மிகப் பொருத்தமானவையாக வியக்கத்தக்கன.

"உலகமாமங்கைதன்றலைவனும்பரிதிகண்
டொல்லெனக்கீழ்த்திசை யொண்முகஞ்சிவந்து
மெல்லெனப்புள்ளொலி விளைத்துப்பாடி
யலக்கணொன்றின்றி மலர்க்கணீருகுத்து
மாட்சிசேர் பொன்னுடை மகிழ்தந்துடுக்குமிக்
காட்சியென்னே காலைப்போழ்துகொல்"

என்று காலைநேரத்தை மிக இனிமையாக வருணித்தது இவ்வாசிரியரின் பிரகிருதிதத்துவ வுணர்ச்சியை விளக்குகின்றது.

"In the world there is nothing great, but man; and in man there is nothing great, but mind" என்ற ஆங்கில ஆன்றோர் மொழியை,

"இனிய இவ்வுலகிலிருக்குமெவற்றுளும்
மனிதனிற்சிறந்த மாண்பொருளில்லை அம்
மனிதன்றன்றுள் வயங்குமெவற்றினும்
மனனிற்சிறந்தமாண் பொருளும்மிலை"

என்று மொழிபெயர்த்து வழங்கியதும், "யாதானு நாடாமாலூராமல்" என்னுந் திருக்குறட் கருத்தை.

"கதுமெனகின்னைக்கைப்பிடித்தோர் தமக்
கெதுவுநன்னாடே! எதுவுநல்லூரே!"

என்று எடுத்தாண்டதும், "புற்றடங்கரவிற் செற்றச் சேக்கை" என்னும் மணிமேகலை யாசிரியர்கருத்தை "உடற்பெரும் புற்றினின்றுடன் றெழுமரவே" என்று வைத்ததும், "நாக்கடிப்பாக வாய்ப்பறை யறைந்து" என்றவோர் ஆன்றோர் மொழியையே ஓரிடத்தில் மேற்கொண்டதும் ஆகிய இவைபோன்ற விடங்களிற் றமக்குசிதமென்று தோற்றியவிடத்து "முன்னோர் மொழிபொருளே யன்றி யவர் மொழியும், பொன்னேபோற்போற்றி" இவ்வாசிரியர் வழங்கியிருத்தலும் இந்நூற்கு ஒருவகைச் சிறப்பே.

இவ்வாறு இதனுள் ஆங்காங்கே மலிந்துகிடக்கும் நயங்களைக் கருதுமிடத்து இது அரியது! அரியது!! என்று உலகம் போற்றிப்புகழக் கடவதோர் நூலே யன்றி வேறன்றென்பதே எமதபிப்பிராயம். தாம் இவ்வுலகிற் கற்றகல்விக்குப்பிரதியாகத் தம் ஒழிவு காலங்களில் இத்தகையபாசுரங்களை எழுதி வெளியிட்டு உலகிற்கு அறிவும் ஆனந்தமும் ஒருங்கே ஊட்ட முயன்ற இவ்வாசிரியரின் முயற்சி மிகவும் புகழத்தக்கதே. இச்சிறு புத்தகத்தின் விலை அணா 4. சென்னைத் தாம்சன் கம்பெனியில் அச்சிடப்பட்டிருக்கின்றது.

IV. விவசாயவிளக்கம் :—

ஐரோப்பிய நாடுகள் பலவற்றைப்போலாது நமது இந்தியாவானது பெரும்பான்மை விவசாயத்தாற் பிழைக்கும் ஓர் நாடாயிருக்கின்றது. ஆகவே இத்தேசம் முன்னுக்கு வரவேண்டுமானால் சனங்களிற் பெரும்பான்மையாரால் விவசாயக்கொள்கைகள் முன்னைவிட நன்றாயும் சாஸ்திரோக்தமாயும் அறிந்தனுட்டிக்கப் படுதல்வேண்டுமென்று பெரியோர் பலருங் கருதுகின்றார்கள். கிருஷிவிஷயத்தில் ஆங்கிலத்தில் அனேக நூல்கள் மலிந்து கிடப்பினும் தமிழில் அவை அரிதாயிருக்கின்றன. ஆகவே விவசாயவிளக்கமென்னு மிந்நூலானது தென்னாட்டாராகிய நமக்கு மிக உபயோகமுள்ளதொன்றே.

இந்நூலில் நிலங்களின் வகைகள், அவற்றின் சாரங்கள், அவற்றைப் பண்படுத்தும் விதங்கள், கிருஷிக்குவேண்டிய கருவிகள், பல வேறுவகைப்பட்ட எருக்களின் உபயோகம், பற்பல பயிர்களை விருத்தியாக்கும் முறை, பயிர்களிலுண்டாகும் புழுப்பூச்சி நோய் முதலியவை, அவற்றின்பரிகாரம், விவசாயத்திற்கின்றியமையாத கால் நடைகள் விருத்தியாக்கும்விதம், என்பனவாதி கிருஷிவிஷயங்களெல்லாம் மிகத் தெளிவாக விவரிக்கப்பட்டிருக்கின்றன. இந்நூல் பல ஆங்கில நூல்களைத் தழுவி எழுதப்பட்டிருத்தலாலும், இதனாசிரியராகிய ம-ா-ா-ஸ்ரீ, ஸ்ரீ. இராஜகோபாலநாயுடு அவர்கள் தக்க கல்வியும் அனுபோகமுங்கொண்டிதனைத் தொகுத்திருத்தலாலும், இதனுட் காணப்படும் பல விஷயங்களும் சரியானபடி அறிந்து பின்பற்றப்படின் கிருஷிகர்களுக்கு மிகப் பிரயோசனகரமாகவேயிருக்குமென்று நம்புகின்றோம். இது கிருஷிகர் ஒவ்வொருவரும் அவசியம் பார்க்கத்தக்க நூலே என்போம். இதன் விலை அணா 12. சென்னைத் தாம்சன் கம்பெனியில் அச்சிடப்பட்டுள்ளது.

C. K. S.

---

THE LATE SIR. K. SESHADRI IYER.

## மைசூர் திவானாயிருந்து காலம்சென்ற ஸர். கு. சேஷாத்ரி அய்யர் தேகவியோகத்தைப்பற்றிப் பாடிய கவிகள்.

1. மண்ணுலகெல் லாம்களிக்க மந்திரியா நெடுங்காலம்
கண்ணுமிடு கவசமும்போற் காசினியைப் புரந்தாயே
எண்ணரிய நுண்மதியு மிருந்திறலும் பெருந்தகையும்
விண்ணுலகம் கொடுபுரக்க விரும்பினையோ மேலோனே.

2. ஒளியாருங் கதிரவன்றேய்ந் தோங்குமி மவரைதேய்ந்து
களியாரும் கடல்தேய்ந்து காசினியெல் லாமிறினும்
விளியாத புகழ்படைத்த மேலோனே நின்புகழிற்
றுளியேனும் தேயாமத சுடர்விட்டுச் சொலித்திடுமே.

3. பாலாஜி விசுவநா தவன்மைந்தன் முதற்பல்லோர்
மேலான வியன்மதியின் மாட்சியினால் மெலிபாது
நாலான கடல்சூழும் பெருஞாலம் நலமெய்த
பாலேபோற் புரக்கினும் உன்வண்புகழ்க்கு நிகராமோ.

4. பெறலரிய திருப்பெற்றாய் பேசரிய இசைபெற்றாய்
உறலரிய உயர்விருதும் உச்சிதமும் உறப்பெற்றாய்
திறலரியிற் சலியாத திண்மையுறு மனம் பெற்றாய்
மறுவிரியும் நலன்பெற்றா ருனைப்போலார் மாநிலத்தே.

5. தமரநெடுங் கடலுலகம் தளராமற் றண்குடைக்கீழ்
அமரவுயிர் புரந்தாரில் நினக்குவமை யரிதென்று
பமரமுரல் மணிமார்ப நினையுலகம் பகர்ந்துவக்கும்
குமரபுரம் சேஷாத்ரீ யையரெனும் சோமானே.

6. ஆற்றினிழி யொழுக்கதனை யருந்தொழில்கட் குரித்தாக்
மாற்றினையால் வளர்பொருட்கு வரவோங்கச் சமைத்தனையால்
ஏற்றபிற பொருள்களைநீ எளிது விடுத் திடுவாயோ
சாற்றினுனை யமைச்சாகச் சார்ந்தோர்க்கும் தளர்வுண்டோ.

7. புலியொன்றைச் செகுத்தாற்குப் பொன்னிருநூ றவைக்களத்து
வலியசில விஞ்சைகளை வகுத்திடுவார்க் கறுநூறு
மெலியுமவர்க் கெழுநூறிவ் விதமாசு வீசலெலாம்
நிலவுபொலன் மலைபோல நீகுவித்த நிதியன்றோ.

8. கசடில்குணத் தமைச்சனே கண்ணென்ப கருத்தென்ப
அசைவில் மணிக் கவசமென வறைகிற்ப அவையெல்லாம்
உசிதமறப் பிறர்பாலே உபசார மாயிருந்த
இசைவுபெற நின்பாலே உண்மையா யிலங்கினவே.

9. நற்றலைகையா ரரசவையி ராமராச் சியமென்று
கற்றவர்க ளின்றைக்கும் கழறுவரா லினிமீது
மற்றதனை விடுத்துச்சே ஷாத்திரியா மந்திரிதன்
கொற்றமுறு மாசென்று குணமாகக் கூறுவரே.

10. மைசூர்தி வானென்று மாநிலமெல்லாம்துதிக்கும்
பொய்சாராப் புகழ்படைத்துப் பூவலயம் புரந்தோனே
மெய்சாரும் நுண்மதியும் விறல்சாரும் பெருந்தகையும்
கைசோர வுடல்விட்டே எவ்வுலகம் கடுகினையோ?

S. M.

OUR PUZZLE CORNER.

## விடுகதைகள்.

இத்தலைப்பின் கீழ் விடுகதைகள், விநோதவார்த்தைகள், இரட்டுறுமொழிகள், சிலேடைகள், எழுத்துக்கூட்டு, அசை நிரைக்கூட்டு, தலைவெட்டுமொழிகள், சதுரக்கட்டுகள் முதலான விசித்திரமான கேள்வைகள் வெளியிடப்படும். இவ்விதக்கேள்விகளைப் பத்திராதிபருக்கு அனுப்புவோர்கள் அவற்றைச் செய்யுளிலாயினும் வசனமாயாயினும் விடையுடன் கூட்டி அனுப்பவேண்டும். வெளியிடப்பட்டவை போக மீந்தவை தள்ளப்பட்டனவென்று கொள்ள வேண்டும்.

I. EVIGENAS. பிதிர்சுள்.

(a) 1. எந்த மரத்துக்குக் காய்களில்லை.
2. எந்தமாலை தரிக்கமுடியாது.
3. எந்தத் தாளம் எல்லாவர்திற்கும் அடி.
4. எந்த எழுத்து எட்டிலில்லை.

(b) 1. ஊசி எப்படிப் பாம்பை யொக்கும்.
2. ககர மெப்படி மனிதரை யொக்கும்.
3. டகர மெப்படித் தீவை யொக்கும்.
4. ரகர மெப்படிச் சந்திரனை யொக்கும்.
5. பழந்துணி எப்போது வேம்பை யொக்கும்.

(c) 1. வான்மிசைப்பறப்பினும் வண்புள்ளன்று
வால் நீண்டிருப்பினும் வல்விலங்கன்றே.

2. ஆனை விழுங்கிடுவேன் ஆனாலும் ஓரடியும்
நீளப்பெயர்கறியேன் நேர்தலையும்-தாளிரண்டும்
இல்லேன் கை பெற்றிருந்தும் எண்ணவிரலில்லேன்
செல்லாய் நான் யாரென்னச் சூழ்ந்து.

3. என்னிடத்துள்ள இருங்கட லென்றும்
தண்ணீர்கண்ட சுவடேயில்லை
பன்னதிபாய்ந்து பரவை மேவினும்
நன்னீர் சிறிதும் நல்கா அவையே;
கழனிகள் யாவும் உழவில்லாது
தரிசு கிடப்ப; தவங்கியபல் நகர்
உள அவற்றொன்றினும் ஓர் இலமெனும்
மிளிருவதில்லை; மேவுமென் னுருவம்
வடிவம் கோணி வனப்பும் பார்வையும்
உடைமலி எழிலும் உறுவதின் றென்னினும்
கடல்புடைகொண்ட நெடுநிலம் முழுதும்
என்பாற்காண விசைத்திடுவேனே.

---

## II. Beheaded Word. தலைவெட்டு மொழி.

தாமரைக்கோர் பேராம் தலையெழுத்தை மாய்த்தக்கால்
நாமெவரும் நாடும் நறு நிதியாம் - ஆமதனைப்
பின்னும் தலையரிந்தாற் பேசும் நமதுடம்பில்
துன்னுமுறுப்பொன்றாமே சொல்.

---

## III. Charades. அசை நிரைக்கூட்டு.

1. மாதர்கையில் வயங்கப்பூண்பதும்
தீதறுதீம்பால் தினந்தினம் தருவதும்
பல்லோர் கூடிப்பான்மையின் வாழ்வதும்
எல்லாம் கூடியிசைத்திடும் போது
கழறிய பஞ்சகாவியத் தொன்றே.

2. முப்பெயர்கூடி முடிந்தொரு பெயராம்
அப்பெயர் முறையே அறைகுவன் கேண்மின
செல்வமும் வனப்பும் சேர அளிப்பது
கொடியொடு கொடியிடை கூடக்கொடுப்பது
குளனொடு கிணறும் வளனுறத்தருவது
எல்லாம் சேர்ந்தோரிரும் புரமாமே.

---

IV. WOOD SQUARE. சொற்சதுரம்.

அகரமுதலா முறையிற் கோத்துச்
சொற்பொருள் விளக்கும் துகளறு நூல்முதல் ;
பரிமளம் இணங்கும் ஒருவகைப்புல்லைத்
தருமொழியாகும் சாற்றுமிரண்டு ;
செவிபுறத்தகாத கொடிய சொற்கேட்கின்
பவம்து தீரப் பகர்வது மூன்று ;
உருவளர்திருமா லுரத்தினில் மேவும்
திருமகள் தன்னைத் தெரிப்பது நான்கு
நான்கையும் முறையே நலனுற அடுக்கின்
பாங்குறு சதுரம் பவித்திடுமென்றே.

---

V. RIDDLE. விசித்திரக் கேள்வி.

யாரைப் பலவனுக்குப் பிறந்தவனென்று
பழிப்பில்லாமல் சொல்லலாம்.

---

## சிறுவர்க்கான பக்கம்.

[விவேகசிந்தாமணியை வாசிக்கும் சிறுவர் சிறுமிகளுக்காக எழுதப்பட்டது.]

---

### மெய்ப்பக்தன்

ஸ்ரீ இராமபிரானென்வர் இராவணாதியரை ஜெயித்து ஜெயபேரிகை முழங்க, சீதாதேவி சமேதராய் அயோத்திக்கு வந்தபின் பட்டாபிஷேக மஹோற்சவத்திற்கு எத்தனம்செய்யப்பட்டது. மாவிலைத்தோரணங்களாலும், அழகிய சித்திரக்கோலங்களினாலும், தெருக்களெல்லாம் அதி ரமணீயமாய் அலங்கரிக்கப்பட்டன. டங்கா, பேரி, முதலிய அஷ்டாதச வாத்தியங்களும் கடலொலிபோல் கோஷித்தன. சகலபிரஜைகளும் எக்களிப்புற்று மனோகுதூகலத்தோடு ஆடையாபரண திவ்யாலங்கிர்தமுடையராகி ஆனந்தத்தாண்டவம் புரிந்தனர். அழகிய சிறுபாலர்கள் சிறந்த பட்டாடைகளையுடுத்து ஆடிப்பாடிக்கொண்டு தெருவில் ஓடியுலாவினர். எங்குகண்டாலும், கேட்டாலும், அந்நகரின் எழிலும், பட்டாபிஷேகத்தைப்பற்றிய பிரஸ்தாபத்தையும் தவிர வேறு கிடையா.

இஃதிங்ஙனம் நிற்க. அரண்[illegible]னையில் அங்க, வங்க, கலிங்க, காஸ்மீர, காம்போஜ, பல்லவம், முதலிய 'பஃறேயத்து முரசுமுழங்கு தானை மன்னரெலாம்' ஒருங்குற்றிருந்தனர். வேதியர் யாகாதி கருமங்களைச்செய்து கொண்டிருந்தனர். தவத்திற் சிறந்த முனிச்சிரேட்டர்கள் வீற்றிருந்தனர் இங்ஙனமாக எள்போடவிடமின்றி நிறைவுற்றிருக்கும் அக்கூட்டத்தினடுவில்,

"மாணிக்கப் பலகைதைத்து வயிரத்தின் கால்கள் சேர்த்தி
ஆணிப்பொன் சுற்று முச்சியழகுறச் சமைத்த பீடம்
ஏணுற்ற பளிக்கு மாடத்திட்டன ரதனின் மீது
சேணுற்ற திரடோள் வீரன் றிருவொடு பொலிந்தான் மன்னோ"

என்றபடி சிறந்து விளங்கிய சிங்கவாதனத்தின் மீது ஸ்ரீராமபிரான் பிராட்டியாரோடு கொலுவுற்றிருக்கும் போது :—

"மங்கலகீதம் பாட மறையொலி முழங்க வல்வாய்ச்
சங்கினங் குமுறப் பாண்டி றண்ணுமை யொலிப்பத்தாவில்
பொங்குபல் லியங்க ளார்ப்பப் பூமழை பொழிய விண்ணோர்
எங்கணுபகனை வெவ்வே றெதிரபிடேகஞ் செய்தார்."

என்னும் வண்ணம் அபிஷேகாதிகளை வெகு மங்களகரமாய் முடித்தபின் அனேக தானதர்மங்கள் வழங்கினர். அப்போது அங்கதன், விபீஷணன், முதலிய எண்ணிறந்தோர் அவரவர் சக்திக்கியன்றவாறு பரிசளிப்பதைப் பெற்று மகிழ்ச்சியுற்றிருந்தனர். ஆனால் ஆஞ்சநேயர் மாத்திரம் ஒரு மூலையில் இருகரங்களையும் தலைமீது கூப்பிவைத்துக்கொண்டு தியானாநந்தவைபவத்தில் வீற்றிருந்தனர். அப்போது சீதாபிராட்டியாருக்கு பக்தனைப்பார்த்தவுடன் மனதுக்குக் கொஞ்சம் வருத்தமும் இரக்கமும் தோன்றிற்று. என்னவென்றால், 'எத்தனையோபேரெல்லாம் பரிசுபெற்றுச் சென்றிருக்க நம் அடியிலே வீழ்ந்து சரணாகதியாகக் கிடக்கும் அனுமனுக்கு பரிசளியாதது பிசகல்லவா?" எனத் தன் மனத்துளெண்ணி சுவாமியைப்பார்த்து "என் பிராணேசா? எல்லாருக்கும் பரிசளித்த தாங்கள் தம்மையண்டி சரணாகதியாகக்கிடக்கும் அனுமனுக்கு ஒன்றும் கொடாமலிருப்பது என் மனதுக்கு மிகவும் வாதனையாயிருக்கிறது" என ஸ்வாமியானவர் புன்னகைபுரிந்துகொண்டு "சீதா! எனவாய்விட்டுக்கூவி "எனக்கு அவனுக்கென்னபரிசளிப்பதென புத்திக்கு நிதானப்படவில்லை. நீ வேணுமாயின் ஏதாவது பரிசளி" எனத் திருவாய்மலர்ந்தருள, சீதாதேவி மிக்க சந்தோஷமாய் ஹனுமந்தனை யழைத்துத் தனது கழுத்தில் ரமணியமாய் ஜொலிக்கும் முத்தாரத்தை யெடுத்து அவன் கழுத்தில் போட ஹனுமந்தன் தலைகுனிந்து பயபக்தியோடு அதைப்பெற்று தூரப்போயுட்கார்ந்து அதை யெடுத்து ஒவ்வொரு முத்தாய்ப் பிய்த்துப்பிடுங்கி வாயில் வைத்துக் கடித்துக் கீழே யெறிந்துகொண்டிருந்தான். இதைக் கண்டதும் சீதாதேவியின் மனத்துயரை அளவிட்டுரைக்க இயலுமோ? மிக்க மனவருத்தத்துடன் "பார்த்தையா! குரங்குச் சேஷ்டையென்பது சரியாகவல்லவோ முடிந்தது" எனவருந்தி ஸ்வாமியிடம் கூற அவர் அவனை யழைத்து "ஏ! அனுமா! என் அப்படிச்செய்தாய்? என அவன், இருகையையும் கூப்பிக்கொண்டு" ஏ ஸ்வாமின்! அம்மணியின் கழுத்திலிருந்த முத்தாரமானது தாங்கள் அடிக்கடி ஆலிங்கனம் செய்யும்பொழுதெல்லாம் தாக்குவதினால் அதிலேயாவது "இராமாமிர்தம்" இருக்குமோ இராதோ வெனப்பரீட்சை செய்தேனன்றி பிறிதொன்றில்லை !! என்றான். ஆகா! கண்டீர்களா! அனுமனுக்கு என்னபக்தி! இதுபோல் நாமும் இரஸிக்கும் நாமமாகிய ராம நாமத்தை யுச்சரித்து சாயுஜ்ஜியத்தை யடைவோமாக. சுபம்.

கே. எஸ். வைத்திநாதய்யர்.

## விவேகசிந்தாமணிப்பிரசுரங்கள்.

இவை ஒவ்வொன்றும் நாணயமான இங்கிலீஷ் பைண்டு செய்து கில்ட் எழுத்துகள் பதித்துள்ளன.

மாக்ஷிமைதங்கிய இந்தியா சக்கிரவர்த்தினியாகிய விக்டோரியா மஹாராணியவர்கள் சரித்திரம். 27-படங்களோடும், இந்தியா கவர்ன்மெண்டு, 'இந்தியா ஆபீஸ்' இவைகளின் அமைப்பு, அமுல்செலுத்தும் முறை விவரங்களோடும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. விலை ரூ.1-4. V. P. P. ரூ. 1-8. அதிக கில்ட்கொடுத்தது ரூ.1-6. V.P.P. ரூ. 1-10.

புத்தாது தீவ்விய சரித்திரம்.—விலை அணா 14. V. P. P. ரூ. 1-2. அதிககில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. மூலமாக ரூ. 1-4.

விவேகமஞ்சரி.—புஸ்தகம் I. இதிலடங்கியவை : (1) கோல்பர்ட்சரித்திரம். (2) சத்தியதேவதைக்கதை. (3). சிவாஜிமஹாராஜா சரித்திரம். விலை அணா 14. V. P. P. ரூ. 1-2. அதிக கில்ட்கொடுத்தது : ரூ. 1. V. P. P. ரூ. 1-4.

இம்மூன்று புஸ்தகங்களும் கில்ட் எழுத்துகளின்றி காலிகோ கட்டடம்செய்து தனித்தனியாகவும் கிடைக்கும் :

(1) கோல்பர்ட் சரித்திரம் : துணிவியாபாரிகடையிலிருந்து முதல்மந்திரிஸ்தானத்துக்குவந்தவாலிபன்கதை. விலை அணா 5. V. P. P. அணா 8.

(2) சத்தியதேவதைகதை : விலை அணா 5. V. P. P. மூலமாக அணா 8.

(3) சிவாஜி மஹாராஜாசரித்திரம் : விலை அணா 6. V. P. P. மூலமாக அணா 9.

ஆபத்துக்கிடமான அபவாதம் அல்லது கமலாம்பாள் சரித்திரம். விலை ரூ. 1-8. V. P. P. ரூ. 1-14. அதிக கில்ட் கொடுத்தது : ரூ. 1-12. V. P. P. ரூ. 2-2.

விவேகரஸத்தாலாட்டு. 6 பை. தபாற்கூலி 6 பை.

வேண்டுவோர் சென்னை திருவல்லிக்கேணி அ. ப. ஏஜன்ஸி, காரியதரிசி ஸி. வி. சாமிநாதய்யர் அவர்களுக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

### கமிஷனுக்கு விற்கப்படும் புஸ்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| மாலதீமாதவம் | ... | ... | விலை அணா 5. |
| தினதயாளு... | ... | ... | ,, ,, 8. |
| கல்வி விளக்கம் | ... | | விலை ரூபா 1-0-0. |

தபாற்கூலி பிரத்தியேகம்.

*Apply to the D. K. Agency, Triplicane, Madras.*

## FOLKLORE IN SOUTHERN INDIA

IN ENGLISH

By Pandit S. M. NATESA SASTRI, B.A.,

*Member of the London Folklore Society.*

| | | | |
|---|---|---|---|
| Part I. | Rs. 1 0 | Part III. | Rs. 1 8 |
| ,, II. | Rs. 0 8 | ,, IV. | Rs. 2 0 |

*Or Rs. 5 a Set. Postage and V. P. charges extra.*

**Only a few sets available.**

**Don't miss this opportunity to secure a rare work which is now out of print.**

*Apply sharp to the Secretary, D. K. Agency, Triplicane.*

---

## Ready for Sale.

Photo of Lord Ampthill and his Staff at Conjeeveram taken with the permission of His Excellency. Also, several Picturesque Sceneries of Lower and Upper Tirupati.

To be had of T. G. APPAVU MUDALIYAR & SON,

*Photographers and Artists,*

*Triplicane, Madras.*

VOL. X.] OCTOBER, 1901. [No. 6.

# THE VIVEKA CHINTAMANI.

## A MONTHLY TAMIL MAGAZINE AND REVIEW.

DEVOTED TO THE DIFFUSION OF GENERAL KNOWLEDGE.

# விவேகசிந்தாமணி

அறிவைப் ✣ பரவச்செய்வதற்கான ✣ மாதாந்தரத் ✣ தமிழ்ப்பத்திரிகை.

"அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா
ரென்னுடைய ரேனு மிலர்."—குறள்.

CONTENTS. PAGE.



அட்டவணை. பக்கம்.



Thick Paper Edition for Patrons.] PUBLISHED BY [Minim um Subscription Rs. 5.

C. V. SWAMINATHA AIYAR,
Secretary, Diffusion of Knowledge Agency, Triplicane,
MADRAS.

Thin Paper Edition for the People. Price of Single Copy As. 6.]  [Subscription Price: Yearly Rs. 4; If Paid Half-Yearly Rs. 2-8.

FOR FULL TERMS OF SUBSCRIPTION SEE INSIDE.

EDITORIAL AND PUBLISHING OFFICE: } { PRINTING OFFICE: GRAVES, COOKSON & CO., POPHAM ...

MADRAS RAILWAY CO.

## Surplus Stores for Sale.

சென்னை ரயில்வே கம்பெனியாரிடம் மிகுந்துபோன சாமான்கள், யந்திரங்கள், இன்னும் பலவிதமான உபகரண சாமான்கள் விற்பனைக்கிருக்கின்றன. அவற்றில் சில கீழே குறிக்கப்பட்டிருக்கின்றன.

| | |
|---|---|
| Blocks, iron, galvanized, of sorts and sizes. | Paper binders with brass screws. |
| Balances, Pooley's, to weigh 400 lbs. | Paper Drawing Demy. |
| Beam, for tripod scale. | Do. Do. Mounted Foolscap size. |
| Chains, iron. | Paper Drawing Letter size. |
| Compasses, proportional, and Napier's. | Do. Loan, Medium size. |
| Divers' Boots. | Powder, Terra de Sienna burnt. |
| Emery flour and powder. | Paper, Tracing 60" x 40" |
| Fish Plates, Bolts and Nuts. | Pincers, carpenters,' |
| Measures, tin, oil graduated. | Pipes, Copper 5¾." |
| Nails, brass-headed. | Do. Do. 6," |
| Optical square. | Rails, iron, double-headed, |
| Panel pens 1¼" x 1½" No. 14. | Ratchets for Screw Jacks. |
| | Rulers, rolling, parallel. |
| | Wire, brass, B. S. W. G. Nos. 12 and 17. |

விற்பனைக்கிருக்கும் சாமான்களின் ஜாடாவான ஜாப்தா. அதன் விலை குறிக்கப்பட்டுத் தயாராயிருக்கிறது. ராயபுரத்திலிருக்கும் சென்னை ரயில்வே ஜெனரல் ஸ்டோர்கீபருக்கு எழுதிக் கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம். சாமானைப் பார்க்க விரும்புகிறவர்கள் ஆபீஸ்நேரத்தில் வந்து பார்வையிடலாம்.

H. BONHAM CARTER, MAJOR, R. E.,
Agent & Manager.

Madras Railway,
Agent and Manager's Office,
Rayapuram Terminus,
Madras, 3rd June, 1901.

JUST OUT

## TIRUVACHAGUM
OF
MANICKAVACHAGAR,
BY
Rev. G. U. POPE, M. A., D. D.

With Introduction, Translation, &c.

Price Rs. 10. Postage, &c., Extra.

Apply with remittance to.

The D. K. Agency, Triplicane,
OR
The Siddhanta Deepika Office, Madras.

---

## Notice to Subscribers.

Subscribers to the Viveka Chintamani are earnestly requested to remit their subscriptions in advance before 30th June. All subscriptions that remain unpaid after that date will be collected at the usual rate of Rs. 4.

## சந்தாதாரர்களுக்கு அறிக்கை.

சந்தாதாரர்கள் எல்லோரும் ஜூன்மீ 30உக்குள் சந்தாத்தொகையை முன்பணமாக அனுப்பிவிடவேணுமென்று கேட்டுக்கொள்கிறோம். அத்தேதியிலிருந்து பாக்கிநிற்கும் சந்தாக்கள் வழக்கமாயுள்ள ரூ. 4 விகிதம் வசூல் செய்யப்படும். முன்பணமனுப்பத் தாமதிப்பதால் பத்திரிகை வெளியாவதும், தாமதப்படுவதால் எல்லோரும் சந்தாவை முன்பணமாகவே அனுப்பிவிடவேணுமாய் மிக வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

அ. ப. ஏஜன்ஸி,
காரியதரிசி.

inch single column per insertion.

...tary, D. K. Agency,